

கல்கி
KALKI 9-1-8 ரு. 1.20
அடுத்த இதழில்:
பாலகுமாரன் எழுதும்
இரும்பு குதிரைகள்
தொடர்கதை ஆரம்பம்

# விண்வெளித் திரைப்படம்!



''ஸ்டார் வார்ஸ்'' — மறக்க முடியாத படம். அதன் இறுதியில் வில்லன் டார்த் வாடர் தப்பிவிடுகிறான். 'அப்புறம் என்ன ஆகிறது?' என்று கதையைத் தொடர்கிறது The empire strikes back. வாடர் மறுபடி கெட்ட சக்திகளை ஒன்று திரட்டிப் புரட்சியாளர்களை அழிக்க அனுப்புகிறான். அழிக்கும் சக்தியை அளவற்றுப் பெற்றுள்ள இயந்திர பூதங்களை எதிர்த்துச் சமாளிக்க முடியாமல் அரசகுமாரி லியாவும் நண்பர்களும் ஒரு விண்கலத்தில் தப்புகிறார்கள். பின் துரத்தி வரும் விண் விமானங்களிடமிருந்து பிழைக்க அவர்கள் புதியதொரு உலகுக்கு வந்து சேருகிறார்கள்.

ஸ்டார் வார்ஸ் படத்தின் இறுதியில் பாராட்டும் பதக்கமும் பெற்றவன் லியூக். அவன் டகோபா கிரகத்துக்குச் சென்று அங்கு வாழும் யோடா எனும் விநோத ஜந்துவைச் சந்திக்கிறான். யோடா பார்க்கப் பயங்கரமாக இருந்தாலும் ஜெடி எனப்படும் சுத்த வீரர்களை உருவாக்கிவருகிறது. யோடாவிடமிருந்து பல ஆற்றல்களைக் கற்கிறான் லியூக்.

இதற்குள் வில்லன் வாடர், அரசகுமாரி லியாவும் நண்பர்களும் ஒளிந்துள்ள மேக நகரைக் கண்டுபிடித்து அவர்களைக் கைப்பற்றிவிடுகிறான்.

யோடாவிடம் புதிய சக்திகளையும் ஆற்றல்களையும் பெற்றுள்ள லியூக் வாடரைச் சந்தித்துப் போரிட்டு இளவரசியைக் காப்பாற்ற முயல்கிறான்.

விண்வெளியில், எதிர்கால விண்கலங்களையும் கம்ப்யூட்டர் சாதனங்களையும் இயந்திர மனிதர்களையும் கற்பனைக்கெட்டாத அழிக்கும் சக்தி கொண்ட ஆயுதங்களையும் பயன்படுத்தி நடக்கும் யுத்தமானது பல்வேறு நட்சத்திர மண்டலங்களையே பாதிக்கிறது!

லியூக்குக்குக் காயம் படுகிறது. ஆயினும் நண்பர்களால் காப்பாற்றப்படுகிறான். நல்ல சக்திகள் தீய சக்தியை வெற்றி கொள்கின்றன.

'முடியும்' என்ற நம்பிக்கையுடன் உறுதியாக முனைந்தால் எதையும் சாதிக்கலாம் என்ற எளிய கருத்தை உள்ளடக்கிய இப்படம் தயாரிக்கப்பட்ட விதத்தில் எளிமை துளியும் இல்லை. கோடிக் கணக்கில் கொட்டி எடுத்த படம் 'ஸ்பெஷல் எஃபெக்டு'க்காகவும் இசைக்காகவும் ஆஸ்கார் பரிசுகளைப் பெற்றது.

வசூலிலும் படம் சளைக்கவில்லை. 125 தியேட்டர்களில் ஒரே சமயத்தில் திரையிடப்பட்டு, ஆறே நாளில் 9 மில்லியன் டாலர் சம்பாதித்தது. முதல் நாள் வசூல் மட்டும் 1,336,305 டாலர் என்பது உலக சாதனை!

- சலன்

# பாலகுமாரன்



# இரும்பு குதிரைகள்

தொடர்கதை

**கல்கி** 16-1-83 பொங்கல் மலர்

# ஒரு சங்கமத்தைத் தேடி..

வாஸந்தி எழுதும்

புதிய
தொடர்
கதை

**கல்கி**

30-1-83
இதழில்
ஆரம்பம்



# நடனத்தின் அதிசய உலகம்!

தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தின் ஒரு பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தது கார்டூனிஸ்ட் நடனத்தின் 'அதிசய உலகம்'. குழந்தைகள் மட்டுமில்லாமல், பெரியவர்களையும் கவரும் பல ரசமான விஷயங்கள். மரங்களில் எல்லாம் கோமாளிகள், அரக்கர்களின் முகங்கள் பயங்கரமாய்ப் பற்களைக் காட்டியபடி. இவற்றுக்குக் கலர் பல்புகளும், பயங்கரமான சிரிப்பும் கூடுதல் கவர்ச்சி.

மேஜிக் – ஒரு மேடையில். பல வித்தைகளைச் செய்து கொண்டே, இடை இடையில் ''நன்றாகக் கவனியுங்கள். நான் மந்திரவாதியில்லை. சாமர்த்தியமாய் உங்களை ஏமாற்றிக் கொண்டிருக்கிறேன். நீங்களும் ஏமாந்து கொண்டிருக்கிறீர்கள்'' என்று ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தார்.

இன்னொருபுறம் வேகமாக, அமைதியாகச் சில மாணவர்கள் ஓவியம் வரைகிறார்கள். மண் உருவங்கள் செய்கிறார்கள். வந்திருந்தவர்களில் ஒருவருக்கு அடித்தது அதிருஷ்டம்! அவரை ஒரு நாற்காலியில் அமரச் செய்து வரைந்து தந்து விட்டார் ஒரு ஓவியர்.

வரைந்த ஓவியங்கள், சிற்பங்கள் விற்பனைக்கு இருந்தன. ஆனால் விலை கேட்டபோது ஐநூறு, ஆயிரம், இரண்டாயிரம் நாலாயிரம் என்று சொல்லி வாயைப் பிளக்கச் செய்து விட்டனர்.

இன்னொருபுறம் குங்-பூ டெமான்ஸ்டிரேஷன். பார்த்துவிட்டுத் திரும்புகையில் குழந்தைகள் அப்பா, அம்மாக்களை ஊ... ஆ... ஊ... என்று குத்தத் தொடங்கின.

எல்லாவற்றுக்கும் மேலாக வருவோரைக் கவர்ந்தவர்கள் சூப்பர்மேன், கோமாளி ராஜா, ராவணன் மூவரும். முகம் மட்டும் வெட்டி எடுக்கப்பட்ட இந்த உருவத்தில் தம் முகம் வைத்துப் போட்டோ எடுத்துக் கொண்டனர். இங்கு அப்பா, அம்மாக்கள் பலர் குழந்தைகளாகி விட்டனர்.

ராமாயணம் – ஒளி ஒலிக் காட்சி இன்னொரு அம்சம். ராமாயணத்தை ஏழு மேடைகளில் நகரும் கட்-அவுட்களில் அமைத்து, ஒலி, ஒளி அமைப்புகளும் செய்திருந்தது பலரும் பாராட்டும்படி இருந்தது.

பொம்மலாட்டம், விகடம் இதெல்லாமும் உண்டு. தம் அதிசய உலகத்தில் அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்த கார்டூனிஸ்ட் நடனம் சொன்னார்: ''இது இந்தியாவிலேயே முதல் முயற்சி. அமெரிக்காவின் டிஸ்னி லாண்ட் அளவுக்கு இல்லாவிடினும், ஏதோ நம்மால் இயன்ற அளவில் நம் ஊரிலும் நிரந்தரமான ஓர் அதிசய உலகத்தை நிர்மாணிக்க வேண்டும் என்பது என் ஆசை. அதன் முதல் படியே இது. ஆயிரக் கணக்கில் செலவழித்து வெறும் பொழுது போக்குக்காக மட்டுமின்றி அறிவூட்டும்படியாகவும் அமைத்திருக்கிறேன். ஜனவரி முதல் தேதியிலிருந்து ஒன்பதாம் தேதிவரை இது நடக்கிறது.

- எஸ். சந்திரமௌலி










# உங்களது குழந்தை புத்திசாலியாக

வளர வழி

# சில்ட்ரென்ஸ் நாலெட்ஜ் பாங்க்

பாகம் 1

குழந்தையின் ஆவலைச் சற்றே தூண்டிவிட்டால் போதும். அப்பப்பா! விந்தை நிறைந்த உலகின் அதிசய நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ளும் துடிப்பினால் உந்தப்பட்டு குழந்தை தொடுக்கும் வினாக்கள் ஆயிரமாயிரம்! 'இது ஏன்?' 'அது எப்படி?' என்ற வினாக்களுக்கு விடை காணாமல் அந்தப் பிஞ்சு மனம் திணறுகிறது. சரியான விடை கிடைத்துவிட்டால், மனம் தெளிவடைந்து புத்தி கூர்மையுறுகிறது மேன்மேலும் அறிவு வளர்ச்சிக்கான தூண்டுதல் ஏற்படுகிறது.




விலை ரூ. 20/-
தபால் கட்டணம் தள்ளுபடி

அழகிய விளக்கப் படங்கள் டபுள் கிரவுன் சைஸ் 232 பக்கங்கள்
ஆங்கிலம், இந்தி மொழிகளில் 1 & 2 பாகங்கள் இதே விலைக்குக் கிடைக்கும்.

முதற் பாகத்தில் இடம்பெறும் 177 வினாக்களுள் ஒரு சில—

## சில்ட்ரென்ஸ் நாலெட்ஜ் பாங்க்

உங்கள் குழந்தைகளின் மூளைக்கு ஒரு டானிக்

■ நாக்கு சுவையை அறிவிப்பது எப்படி? ■ ஆந்தை இரவில் பார்ப்பது எங்ஙனம்? ■ மிருகங்கள் நம்மைப் போல ஏன் பேசுவதில்லை? ■ வானவில் உண்டாவது எப்படி? ■ பட்டகை எவ்வாறு வானவில் நிறங்களை வெளிப்படுத்துகிறது? ■ கடிகாரத்தினுள் ஜுவெல்கள் பொருத்துவதேன்? ■ சீனத்து நெடுஞ்சுவர் ஏன் கட்டப்பட்டது? ■ பனித்துளிகள் எவ்வாறு உருவாகின்றன? ■ வைரங்கள் ஏன் பெருமதிப்புடையன?

■ கண்களை மூடி நேராக நடக்கமுடியாததேன்? ■ மனிதன் முதுமையடைவது ஏன்? ■ காலங்கள் மாறுவதேன்? ■ காற்றின் வேகத்தை அளப்பது எப்படி? ■ ஆலங்கட்டிகள் உண்டாவது எப்படி? ■ வாணவேடிக்கைகள் வண்ணமயமாகக் காண்பது எப்படி? ■ மூடுபனி எவ்வாறு உண்டாகிறது? ■ பேரண்டம் எவ்வாறு உருவானது? ■ பூமியின் இயக்கத்தை நாம் ஏன் உணர்வதில்லை? ■ சூரியனுக்கு இறப்பு உண்டா?

VANDANA/PM/Tam-8

**'சில்ட்ரென்ஸ் நாலெட்ஜ் பாங்க்' பாகம் 2 தயாரிப்பில் உள்ளது. உங்கள் பிரதிக்கு அருகாமையில் உள்ள புத்தகக் கடையில் பதிவு செய்துகொள்ளவும்.**

***AVAILABLE AT:***
Leading bookshops, Higginbotham's Railway Book Stalls or ask by V. P. P. from



**PUSTAK MAHAL**
Khari Baoli, Delhi-110006.
10-B, Netaji Subhash Marg, N.Delhi-110002.

ஜனவரி 6ம் தேதியிலிருந்து 16ம் தேதி வரை சென்னை உட்லண்ட்ஸ் டிரைவ்-இன் இடத்தில் நடைபெறும் ஆறுவது புத்தகக் கண்காட்சியில் எங்கள் ஸ்டாலில் புத்தகங்களை வாங்கி 10% பயன் அடையுங்கள். மற்றும் எல்லா பெரிய புஸ்தகக் கடைகளிலும் எங்கள் புஸ்தகம் கிடைக்கும்.

கலவரங்கள்
திருவனந்தபுரம்
சுட்டுடுவேன்!... ஒழிச்சுப்புடுவேன்!...
பரோடா









# கல்கி

1983 ஜனவரி 9
துந்துபி மார்கழி 25
மலர் : 41 இதழ் : 24




# இருள் சூழ்ந்த தமிழகம்!

தமிழகத்தில் இருள் சூழ்ந்திருக்கிறது. சில நேரங்களில் சில வீடுகளில் விளக்குகள் எரிந்தாலும் மக்கள் மனங்களில் சூழ்ந்துள்ள பயங்கர இருளை அவற்றால் அகற்ற முடியவில்லை.

ஹை டென்ஷன் ஆலைகளுக்கு 100 சதம் மின்வெட்டு. லோ-டென்ஷன் ஆலைகளில் இப்போதுள்ள 45 சதம் வெட்டு மேலும் அதிகரிக்கப் போகிறது. பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் லே-ஆஃப் பினால் பாதிக்கப்படப் போகிறார்கள். அவர்களின் குடும்பங்கள் வருவாய் குறைய வறுமையில் வாடப் போகின்றன. தொழிலுற்பத்தி பாதிக்கப்பட ஏற்கனவே நலிந்துள்ள தமிழகத்தின் பொருளாதாரம் மேலும் சீர் கெடப் போகிறது. இந்த அவல நிலைக்கு யார் பொறுப்பு?

'பருவமழை பொய்த்தது' என்று கூறித் தட்டிக் கழித்துவிட முடியாது. பருவமழை பல சமயங்களில் பொய்க்கும் என்பது எல்லோரும் அறிந்ததே. அதனை எதிர்பார்த்தே காரியங்கள் செய்து நிலைமை இவ்வளவு பரிதாபகரமாகப் போகாமல் காப்பதே அரசின் கடமை. சில வாரங்கள் முன்புவரை வீரமாகப் பேசிக் கொண்டிருந்த அமைச்சர் ராமச்சந்திரன் இன்று அழுது வடிகிறார். உரிய நேரத்தில் அவரை எச்சரிக்காதது அதிகாரிகள் தவறா அல்லது அதிகாரிகள் எச்சரிக்கையை அலட்சியப்படுத்தியது அமைச்சர் தவறா? அறிய மக்களுக்கு உரிமை உண்டு.

தமிழகத்தில் 74ல் ஆண்டு முழுவதும் மின்வெட்டு இருந்தது என்றும் 75லே 100 சதம் மின்வெட்டு இருந்தது என்றும் சமாதானம் கூறுவது அசட்டுத்தனம். இப்படியே போனால் நமது பாட்டனார் காலத்தில் மின்விளக்கே கிடையாது என்றுகூடச் சொல்லிக் கண் துடைக்கலாம். நாமென்ன பச்சைக்குழந்தைகளா?

'மத்திய அரசுதான் பெரும் பொறுப்பு ஏற்க வேண்டும்' என்ற வழக்கமான பல்லவியையும் கேட்டுக் கேட்டு அலுத்து விட்டது. மத்திய அரசு என்பது என்ன அந்நிய அரசாங்கமா? அல்லது ஜன்மப் பகைவர்களா? நம்முடைய அரசுதானே அதுவும்? தமிழக முதல்வரும், அமைச்சர்களும், அதிகாரிகளும், டில்லி பிரதிநிதியும் எம்.பி.க்களும் எதற்காக இருக்கிறார்கள்? காலாகாலத்தில் ஆகவேண்டியதைக் கவனித்து ஆவன செய்யாமல் மெத்தனப் போக்குடன் காலத்தை ஓட்டி விட்டு, ''ஐயோ மத்திய அரசு ஒத்துழைக்கவில்லையே!'' என்று ஒப்பாரி வைப்பது ஏன்? கட்சி ரீதியான இவர்களுடைய குடுமிபிடி சண்டை மக்கள் நலனைப் பாதிக்க விடலாமா? சிவசங்கரிக்குக்கூட எளிதாகப் பேட்டி கிடைக்கிறது. நமது முதல்வரோ ஜனவரி 10ம் தேதிதான் பிரதமரைச் சந்தித்து மின் நிலைமை பற்றிப் பேசப்போகிறாராம்! வெட்கக்கேடு!

நிலக்கரி வரவில்லை; கப்பல் வாங்க முடியவில்லை; உள்நாட்டு நிலக்கரி உயர்ரகமில்லை; பி. எச். இ. எல். உபகரணங்கள் தரமானதாயில்லை என்றெல்லாம் காரணங்களை அடுக்குவதால் யாரையும் திருப்திப்படுத்த முடியாது. நொண்டிக் குதிரைக்குச் சறுக்கியது சாக்கு; தமிழக அரசுக்கோ ஓராயிரம் சாக்கு! மக்களுக்குத் தேவை விளக்கங்கள் அல்ல; சாதனைகள்.

தமிழ்நாடு மின்வாரியத்துக்கு, மின் நிலையங்களைத் திறம்பட நிர்வகிக்கத் தெரியவில்லை என்பதும் மின் விநியோகத்திலேயே ஏகமாக மின்சாரம் வீணாகிறது என்பதும் உலகறிந்த உண்மைகள்.

தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத அடிப்படைத் தேவையான மின் உற்பத்தியில் கருத்துச் செலுத்தாத அரசு, சத்துணவுத் திட்டம் உள்பட வேறு எவ்வளவுதான் சமுதாய நலன் திட்டங்களை அமல்படுத்தினாலும் அவையெல்லாம் விழலுக்கு இறைத்த நீராகிவிடும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# பெய்ரூட் பயங்கரங்கள்!

"**நா**ன் காரில் வெளியே போய்க்கொண்டிருந்த எத்தனையோ சமயங்களில் எனக்குச் சற்று முன்னால் ஒரு கார் திடீரென்று வெடித்துத் தூளாவதைப் பார்த்திருக்கிறேன். கடத்தல்களும், காருக்கு வெடி வைக்கிற விஷயங்களும் அன்றாட நிகழ்ச்சிகளாகி விட்டன. காலையில் வீட்டை விட்டுக் கிளம்பினவர், அதிர்ஷ்டம் இருந்தால் மாலையில் வீடு திரும்பலாம். எப்போது சண்டை ஆரம்பிக்கும் என்று சொல்லவே முடியாது!"

லெபனான் சர்வ கலாசாலையில் உதவி பேராசிரியராகப் பணியாற்றும் **டாக்டர் ஜி. வி. ஜெகந்நாதன்** சென்னையைச் சேர்ந்தவர். சமீபத்திய பெய்ரூட் சண்டையின் போது அங்கே இருந்தவர். தாம் நேரிடையாகப்பார்த்த சில விஷயங்களைத் தொடர்ந்து சொல்கிறார்:

"லெபனான் பிரான்சிடமிருந்து விடுதலை பெற்ற நாடு. இங்கே கிறிஸ்தவர்கள் மைனாரிட்டி. முஸ்லிம்களோ இரண்டாம் பட்சக் குடிமகன்களாக நடத்தப்பட்டனர். பாலஸ்தீனத்திலிருந்து லெபனான் நாட்டுக்கு வந்தவர்களைக் கிறிஸ்தவர்கள் ஆதரவு அளித்து ஏற்றனர். வந்து சேர்ந்த பாலஸ்தீனவர்களோ, முஸ்லிம்களைத் துணையாகக் கொண்டு லெபனானில் பெரிய சக்தியாக வளர்வதோடல்லாமல், இஸ்ரேலையும் எதிர்க்க முயற்சி செய்தனர். எங்கே தாங்கள் அழிக்கப்பட்டு விடுவோமோ என அஞ்சினார்கள் கிறிஸ்தவர்கள். விளைவு: 1975-76ல் சண்டை துவங்கியது. சிரியா, சண்டையை நிறுத்திச் சமாதானப்படுத்துவதற்காக அழைக்கப்பட்டது.

முதலில் சமாதானம் செய்து வைப்பதாக நுழைந்த சிரியா நாடு போகப் போக நாட்டைச் சூறையாட ஆரம்பித்து விட்டது. அவர்களை எதிர்த்த யாராயிருந்தாலும், பட்டப் பகலிலேயே சுட்டுக் கொல்லப்பட்டனர்.

மேற்கு பெய்ரூட்டில் கொள்ளையடிக்க ஆரம்பித்தனர். நாடு முழுவதுமே சிரியர்கள்-பாலஸ்தீனர்களின் கருணையில் வாழ ஆரம்பித்தது. ஒவ்வொரு தெரு முனையிலும் செக் பாயிண்ட் வைக்கப்பட்டிருக்கும். அதில் நின்றுதான் போக வேண்டும். மீறினால் உடனே தயவுதாட்சண்யம் இல்லாமல் சுடப்பட்டார்கள். நமக்குச் சொந்தமான பொருள் ஏதாவது அவர்களுக்குப் பிடித்திருந்தால், பேசாமல் கொடுத்துவிட்டுப் போய்விட வேண்டும். ஏன் எதற்கு என்றால் உயிரோடு வெளியேற முடியாது.

நகரத்தின் மையப் பகுதியில் ஒரு முறை நாங்கள் (நானும் என் மனைவியும்) சென்று கொண்டிருந்தோம். ஒரு





திரு. ஜெகந்நாதனும் அவர் மனைவியும்

வர், நின்று கொண்டிருந்த மற்றவரைச் சிகரெட் கேட்டார். அவர் தம்மிடமிருந்தும் தர மறுக்கவே, உடனே தம் துப்பாக்கியால் சுட்டு விட்டார்.

உடனே அவரவர்களைச் சேர்ந்தவர்கள் கூட்டமாகச் சேர்ந்து கொள்ளப் பெரிய சண்டை ஆரம்பமாகி விட்டது.

அடிப்படையாக எல்லோருமே நல்ல மனிதர்களாக இருந்த போதிலும், தொடர்ந்து ஏழு வருடங்களாகச் சண்டை, குழப்பம், நிரந்தரமில்லாத வாழ்க்கை இவற்றையே அனுபவித்து வந்திருப்பதால் டென்ஷன் அதிகமாகி – அவர்கள் எந்த நேரத்தில் தங்கள் கோபத்தை வெளிப்படுத்துவார்கள் என்று தெரியாது.

பாலஸ்தீனர்களை எப்படியாவது வெளியேற்றிவிட வேண்டும் என்பது இஸ்ரேலின் எண்ணம். லெபனானில் பெய்ரூட், சிங்கப்பூர் மாதிரி ஒரு சுதந்திர வாணிபத் துறைமுகம்.

இஸ்ரேல் மேற்கு பெய்ரூட்டைத் தாக்கப் போவதாகச் செய்தி வந்ததாலும், வெடி குண்டுகள் அவ்வப்போது வீசப்பட்டு ஏதும் அறியாத ஜனங்கள் கும்பல் கும்பலாக இறந்ததாலும் நாங்கள் கிழக்கு பெய்ரூட்டுக்குப் போக வேண்டியதாயிற்று.

அங்கே வீடு கிடைப்பது பெரிய பிரச்னையாகி விட்டது. எந்த சௌகரியமும் இல்லாமல் ஒரு ஃப்ளாட் கிடைத்தது! வேறு வழியில்லாமல் அதிலேயே இருக்கப் பழக்கப் படுத்திக் கொண்டோம்.

இதற்கிடையில், நான் மேற்கு பெய்ரூட்டுக்குச் சென்று மெத்தை, தலையணை போன்ற பொருள்களைக் கொண்டு வர வேண்டியிருந்தது. இந்திய தூதரகத்தைச் சேர்ந்த இருவர் என்னுடன் வர காரில் புறப்பட்டோம். கிழக்கு – மேற்கு பெய்ரூட்டைப் பிரிக்கும் பகுதிக்கு நோ மேன்ஸ் லாண்ட் என்றுபெயர். சாதாரணமாக அங்கே சோதனை செய்ய யாரும் இருப்பது கிடையாது.

ஆனால் எங்கள்கார் அந்தப்பகுதியில்போய்க் கொண்டிருந்தபோது திடீரென்று சிலர் எங்கள் காரைச் சுற்றிமறித்தார்கள். காரைச் சோதனை போட வேண்டும் என்றார்கள். எங்களை இறங்கச் செய்து துப்பாக்கியை நெற்றியில் வைத்து அழுத்தி எல்லா உடைமைகளையும் பிடுங்கிக் கொண்டார்கள். பிறகு எங்கள் காரில் அவர்கள் புறப்பட்டனர். கிட்டத்தட்ட நூறு மீட்டர் தூரம் போனதும் காரைநிறுத்திச் சாவியைத் தூர எறிந்து

விட்டுப் போய் விட்டார்கள். காரணம் நாங்கள் உடனே அவர்களைக் காரில் பின் தொடர்ந்து விடக் கூடாது என்பதுதான்.

ஒரு வாரம் வரைக்கும் இப்படிப்பட்ட அனுபவங்கள் விஸ்வரூபம் எடுத்துப் பய முறுத்திக் கொண்டே இருந்தன.

கிழக்கு பெய்ருட்டில் பெரும்பாலான இந்தியர்கள் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள்தான். அவர்களுக்கு வேலை செய்பர்மிட் இருந்ததே தவிர குடியிருப்புச் சான்றிதழ் கிடையாது. அவர்கள் தொழிற்சாலைகளில் பணிபுரிந்து வந்தார்கள். — கைதிகள் மாதிரி நடத்தப் பட்டு வந்தனர். சண்டைக் காலத்தில் வேலையிலிருந்து வெளியேற்றப்பட்டு அளவுகடந்த கஷ்டத்துக்கு ஆளானார்கள். இந்திய தூதரகம் இவர்களைக் காப்பாற்ற வேண்டியதாகி விட்டது. வெளியேற்றப்பட்ட தமிழர்கள் ஆங்கிலமும் இந்தியும் தெரியாமல் தவித்த போது நான் அவர்களுக்கும் தூதரகத்துக்கும் இடையே மொழிபெயர்ப்பாளனாகப் பணியாற்றி உதவினேன்.

கிழக்கு பெய்ருட்டில் நாங்கள் இருந்த நாட்கள் முழுக்க மைதா ரொட்டியும் தயிரும்தான் உணவு. வேறு எதுவும் கிடைக்காது. பாலஸ்தீனர்களின் வெளியேற்றத்துக்குப் பின் நாங்கள் மேற்கு பெய்ருட்டுக்கு வந்தபோது தண்ணீர், மின்சார வசதி இல்லாமல் அவதிப்பட்டோம். ஒரு நாளில் இரண்டு மணி நேரத்துக்குத்தான் மின்சாரம் இருக்கும். சுத்தம் செய்யப்படாத குப்பை கூளங்கள் தேங்கிக் கிடந்தன. நல்ல காற்றைச் சுவாசிக்க முடியாதபடி எங்கும் துர்நாற்றம்.

பாலஸ்தீனப் படுகொலை நிகழ்ச்சிக்குப் பின் தண்ணீர் மின்சார வசதிகள் இல்லாமல் போனதற்குக் காரணம் இருந்தது. எவ்வளவு அக்கிரமமாகக் கொலை நிகழ்ச்சிகள் நடந்துள்ளன என்பது வெளி உலகுக்குத் தெரியாமல் இருக்க வேண்டும் என்பதற்காக இஸ்ரேல் செய்த ஏற்பாடு அது. நான் குடியிருந்த வீட்டில் கிணற்று நீர் கிடைத்ததால் கொஞ்சம் பிழைத்தேன். இது போக சிறு டின் 20 ரூபாய் என்று பீர் வாங்கிக்குடித்துத் தண்ணீர்ப் பிரச்னையைச் சமாளித்தேன். அந்த நேரத்தில் பணம் தண்ணீர் மாதிரி செலவழிந்தது. என் மனைவி கருவுற்றிருந்ததால் அவளுக்காகக் கொஞ்சம் நல்ல தண்ணீரை நூறு ரூபாய் கொடுத்து வாங்கினேன். ஒரு மாதம் வெறும் முட்டை, தயிர், தண்ணீர், பீர் — இரண்டு பேருக்கு ஆன செலவு ரூ. 6200.

புது விதமான வெடிகுண்டுகளை இந்தச் சண்டையின்போதுதான் பார்த்தேன். ''வேக்கும் பாம்ஸ்'' பெரிய கட்டிடங்களின் மீது மேலே இருந்து போடப்படும். அடுத்த கணம் அந்தக் கட்டிடம் அப்படியே தரை மட்டமாகிவிடும். இதில் என்ன ஆச்சரியம் என்றால் அந்தக் கட்டடத்தின் அருகில் இருக்கும் வீட்டுக்கோ, கட்டிடத்துக்கோ எந்தவிதப் பாதிப்பும் — சிறு விரிசல் கூட இருக்காது.

இன்னொரு வகைக் குண்டு வீசப்படும் போது வெடிக்காமல் எதன் மீதாவதோ யார் மீதாவதோ பட்டதும் வெடிக்கும். அந்தப் பெரிய குண்டின் உள்ளே இருந்து எண்ணற்ற சின்னக் குண்டுகள் புறப்பட்டுத் துளைத்துத் தாக்கும்.

சாதாரணமாகக் குண்டு வீச்சு அக்கம் பக்கத்தில் நடக்கும்போது வீட்டுக் கண்ணாடி ஜன்னல்கள் சிதறும். அதற்காக எல்லாருமே கண்ணாடிக் கதவுகளைத் திறந்து வைத்திருப்பார்கள். ஜன்னல்களின் வழியே கையை விட்டு நம் வீட்டு விலை உயர்ந்த பொருட்களை யாராவது தூக்கிப் போய் விடுவார்கள். கேட்க முடியாது.

சண்டை ஓய்ந்த பின் — எதிலும் சம்பந்தப்படாத எதுவும்அறியாத அப்பாவி மக்களைப் பார்த்தபோது பாவமாக இருந்தது. வீடு வாசலை இழந்து துணிமணி எதுவுமின்றி அங்கங்கே கூட்டம் கூட்டமாக உட்கார்ந்திருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கையை அடியோடு ஆட்டிவிட்டது இந்தச் சண்டை. அவர்கள் எல்லாமே முடிந்து போய் விட்ட மாதிரி சூன்யமாக உட்கார்ந்திருக்கின்றனர். எதிலும் பிடிப்பில்லை. குறிக்கோள் இல்லாத இந்த வாழ்க்கை எந்த நேரத்திலும் முடிந்துவிடும் என்கிற எண்ணத்தில் மனநிலை பாதிக்கப்பட்ட நோயாளிகளாக வாழ்ந்து வருகிறார்கள்.

•பேட்டி: கோபு ராமஸ்வாமி

---

''விளம்பரப்படங்கள் மூலம் அறிமுகமாகித் திரையுலக நட்சத்திரமானவர்களும் உண்டு. நட்சத்திரமான பிறகு விளம்பரங்களில்நடிப்பவர்களும்உண்டு. ரத்தி, ரேகா, கபீர் பேடி, ஷர்மிளா டாகூர் போன்றவர்கள் முதலில் மாடல்களாக இருந்தவர்களே. ஜெய்ஸ்ரீ பிக்சர்ஸ் என்ற எங்கள் விளம்பர நிறுவனம் அறிமுகப்படுத்திய மஞ்சு பார்கவி இன்று முன்னணி நடிகை. மேலும் ரீனா, திலீப் ஆகியோர் இவ்வாறுதான் நட்சத்திரங்களானார்கள். நட்சத்திரங்களான பிறகு விளம்பரப் படங்களில் நடிக்கிறவர்கள் வரிசையில் தேங்காய், மனோரமா, மேஜர், மகேந்திரன், மாதவி போன்றோர் குறிப்பிடத்தக்கவர்கள்.''

ரமணன் (படம்) கூறக் கேட்டவர்:
ஏ.வி.எம். கணேஷ்





கரும்பு இனிக்குதா?
அதைவிட இனிக்குமே நம்ம
கோகுலம்

# கோகுலம்

மாதப்பத்திரிகை

கௌரவ ஆசிரியர்: அழ. வள்ளியப்பா

**பொங்கல் திருநாளில்**
**மீண்டும் மலர்கிறது**



96 பக்கங்கள் * தனிப் பிரதி ரூ. 2/- ஆண்டுச்சந்தா ரூ. 24

கோகுலம், கிண்டி, சென்னை-600 032.

# கண்ணீர் முகங்கள்



சந்தானம் மறுபடியும் பார்த்தான்.

ஜெயா அவனை விடுத்துப் பார்வையை நகர்த்துகிற அவசரம் அவனைப் பாதித்தது. என்ன ஆயிற்று? எங்கு தவறு நிகழ்ந்தது?

சுமார் முந்நூறு பேர் அட்சதையும் பூவுமாய்த் தயாராய் நிற்கிற போது கண்களில் கண்ணீரைக் காட்டுகிற துணிச்சல் இவளுக்கு எப்படிவந்தது? எதற்கு வந்தது?

ஜெயா மடியிலிருந்த நாப்கினை எடுத்து முகத்தை அழுந்தத் துடைக்கிற பாவனையில் கண்களையும் துடைத்துக் கொள்வதைக் கவனித்தான்.

அக்னியில் நெய் வார்க்கிற போது இடையிடையே அக்னி தணிந்து புகையாய் எழும்பி அப்புறபோது இவனுக்கும் கண் சிவந்தது. முதலில் அந்தப் புகையின் தாக்குதல் என்று தான் ஜெயாவின் சிவந்த கண்களைக் கணித்து விட்டான்.

புகை கண்ணில் மட்டும்தான் நீரை வரவழைக்கும். முகத்துசந்தோஷத்தைத் துடைத்தெறிந்து சோகப் பூச்சைப் பூசிவிடாது என்று புரிந்தபோதுதான் அந்தச் சந்தேகம் வந்தது.

நேற்றைக்குக் கூட சந்தோஷமாகத் தானே இருந்தாள்.

ஜானவாசம் முடிந்து காரிலிருந்து இறங்கி ஆரத்திக்கு நின்றுவிட்டு அவன் உள்ளே நுழைந்தபோது தங்கைகளோடு அறைக் கதவுக்குப் பின்னிருந்து ஓரமாய்க் கவனித்துச் சட்டென்று வெட்கினாளே, அப்போ இல்லாத துக்கம் இப்போது என்ன வந்தது?

ஒருவேளை இந்தக் கல்யாணம் அவளது இஷ்டத்தை மீறி நடக்கிறதோ?

சந்தானத்துக்கு நிறையக் குழப்பமாயிருந்தது. இன்னும் கொஞ்ச நேரம்தான். அப்புறம் தவில் ஒலிய மேளம் கொட்டிப் பூவையும், அட்சதையும் சொரிந்து அவள் கழுத்தில் தாலி ஏறிவிடும். கழுத்தில் விலங்கிட்ட பின்னால் அவள் அழுகைக்கு அர்த்தமில்லாமல் போய்விடும். அதற்குள் இதைத் திசை திருப்பினால்தான் உண்டு. செய்யப் போகிறானா?

"ரெண்டு பேரும் எழுந்துக்கோங்கோ."

எழுந்துகொண்டு தாமரை மொக்குமாதிரி அவள் கையைக் குவித்து இவனிடம் நீட்டிய போது அந்தக் கையை அழுத்தமாய்ப் பற்றுகிறபோது சந்தானம் கவனித்தான். விரல்கள் உதறிக் கொண்டிருந்தன. கண்கள் இன்னும் சிவந்து நீர் பூசியிருந்தது. உதட்டை மடித்துப் பற்களில் பிடித்திருந்ததில் அழுகையை மறுப்பது புரிந்தது. மேலும் தாமதமாவதற்கு முன் கேட்டுவிடலாமா?

'ஜெயா....'

ஊஹூம்... வாயில் வார்த்தை வரவில்லை. மெலிதாய் ஒரு பயம் வேறு தோற்றியிருந்தது. உண்மையிலேயே இஷ்டமில்லை என்று அவள் சொல்லிவிட்டால்?

இந்தப் பெண்ணை இனி மறக்க முடியுமா?

சற்றுக் குள்ளமாய் ஐந்தடியைத் தொடுகிற உயரம். சற்றே வெளிறின சிவப்பு. நிறம் அடர்த்தியான கருங்கூந்தல். மிக நேர்த்தியான புருவ வளைவுகள். பெரிய கண்களில் கரிய விழிகளின் கண்ணாடிப் பளபளப்பு. அளவான கூரான நாசி. வலதுபுறம் பொட்டு மூக்குத்தி. உடல் சற்றே பருமன். ஆனால் இந்த மொத்தத்தின் ஈர்ப்பு அசாத்தியம். லேசாய்க் கண்களைச் சுருக்கி அவள் பார்க்கிறபோது விர்ரென்று ரத்தம் சூடு பிடிக்கும். புன்னகைக்காக உதடு மெலிதாய்ப் பிரிகையில் வரிசைப் பற்கள் நெஞ்சில் இடம் பிடிக்கும்.

ஆனால் இன்றைக்கு அந்தப் புன்னகை இல்லை. அந்தப் பார்வையைக் காணோம்.

சந்தானம் சுற்றிலும் பார்வையைப் படர்த்தினான். சரேலென்று தாக்குற்றான்.

ஜெயா மட்டுமில்லை அவளின் அப்பா, அம்மா தங்கைகள் என்று எல்லா முகங்களிலும் ஓர் இழை பிரிந்த சோகம். ஜெயாவின் அப்பா சட்டென்று சுதாரித்து இவனைப் பார்த்து ஒரு பரவசமான புன்னகையை வீசினார்.

அக்கினியை வலம் வந்து மந்திரங்கள் சொல்லி, கழுத்தில் மஞ்சள் கயிற்றை ஏற்றுகிற சமயம் வரை நெஞ்சில் அந்தச் சின்னப் படபடப்பு இருந்தது. ஏராளமான கைகள் நீண்டு நீண்டு 'கங்கிராஜுலேஷன்ஸ்' என்று வாழ்த்தியபோதுதான் சற்று நிம்மதி வந்தது.

அவ்வளவு பெரிய ஹாலில் போடப்பட்ட முந்நூறு நாற்காலிகளிலும் ஆளில்லாமல் காலியாகிப் போய் இருந்த ஒன்றிரண்டு பேரும் உண்ட மயக்கத்தில் அங்கங்கே சரிந்திருக்க ஜெயாவின் அம்மாவும், மற்ற சில ஆண் உறவுகளும், மற்ற ஏற்பாடுகள் செய்வதில்முனைந்திருக்க, சந்தானமும் ஜெயாவும் இடையில் இரண்டு நாற்காலி விட்டு உட்கார்ந்திருந்தனர். சாப்பிடுகிறபோதுகூட எல்லாக் கல்யாணங்களிலும் நடக்கிற அந்த சுவாரஸ்யங்கள் எல்லாம் இல்லாமற் போய் விட்டது. அதில் சந்தானத்திற்குக் கொஞ்சம் வருத்தமாகக் கூட இருந்தது. சுற்று முற்றும் பார்த்தான். குரல் எட்டுகிற தூரம் வரை யாரும் இல்லை.




''ஜெயா...'' —கொஞ்சம் பிசிறு தட்டிப் போன குரலில் கூப்பிட்டான்.

''ம்...?''

ஜெயாவின் கண்கள் சற்றுத் தெளிந்திருந்தாலும் அழுகையின் தழும்பு முகத்தில் படர்ந்திருந்தது.

''இந்தக்கல்யாணத்தில்உனக்குசந்தோஷந்தானே... எதையோ பறிகொடுத்த மாதிரி இருந்தியே... நீ சம்மதிச்சுத்தானே இந்தக் கல்யாணம் நடந்தது? இல்லே உங்க வீட்ல கட்டாயப்படுத்தி...''

''ஏன் இப்படியெல்லாம் கேக்கறீங்க?''

''காலேல நீ அழுதுக்கிட்டிருந்தல்ல?''

''ஆமா... அதுக்குக் காரணம் வேறே...''

''எங்க வீட்ல யாராவது தப்பா நடந்துக்கிட்டாங்களா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே..''

''பின்னே?''

''ராத்திரி சொல்றேனே...''

சந்தானத்தின் கண்ணில் ஆச்சரியம் துள்ளிற்று.

ராத்திரி சற்றுத் தாமதமாக வந்தது.

சந்தானம் அவசரமாய் ஜோடிக்கப்பட்ட அந்த அறையைப் பார்வையிட்டுக் கொண்டிருந்தான். புத்தம் புது மெத்தைகள் உடம்பை உறுத்துகிற மாதிரி மல்லிகையும் கனகாம்பரமும் முல்லையும் குடியிருந்தன. நான்குபுறமும் தோரணம் கட்டின மலர்ச் சரங்களிலிருந்து வாசம் மிதந்து காற்றில் கலந்திருந்தது.

சந்தானத்தின் பொறுமை சற்று விலகியிருந்தது. காலையிலிருந்து பட்ட அவதியும் அசதியும் அயர்த்தியிருந்தது.

மெல்லக் கதவு திறந்து ஜெயா நுழைந்தாள். மரபுப்படி அவனின் காலைத் தொட்டு எழுந்தாள். சந்தானம் ஞாபகமாக அவள் முகத்தைப் பார்த்தான். அந்தச் சோகம் முற்றிலும் விலகாத ஒரு 'தோல் போர்த்தியிருந்தது.

''உனக்காகக் காத்திருக்கேன் ஜெயா!''

அவள் தோளை அணைத்து. மெல்ல நகர்த்திக் கட்டிலில் அமர்த்தினான்.



**பரீட்சை விடைத்தாள்களில் மாண வர்கள் என்னவெல்லாம் எழுது வார்கள்? இதோ சில சாம்பிள்கள்:**

- ஸ்ரீராமஜெயம், ஸ்ரீராமஜெயம் என்று ஒரு பக்கம் முழுவதும்.
- ''சார்! நான் மிகவும் ஏழை! சினிமா கொட்டகையில் முறுக்கு வியாபாரம் செய்பவன். தயவுசெய்து கருணை காட்டுங்கள்.''
- ''கணக்கு எனக்குச்கஷ்டமான பாடம். என்ன படித்தாலும் மூளையில் ஏறுவ தில்லை. எப்படியாவது பாஸ் போட்டு விடுங்கள்.''
- ''ஐயா! நான் கீழ் ஜாதி! என்னைக் கை தூக்கி விடுங்கள்.''
- ''ஐயா! நான் மூன்று முறை ஃபெயில் ஆனவன். எப்படியாவது பாஸ் மார்க் போட்டு விடுங்கள். எனக்குத் திருமணமாகி விட்டது. மனைவி முகத் தில் விழிக்க வெட்கமாக இருக்கிறது. ப்ளீஸ்!''
- சார் நான் மட்டும் பரீட்சையில் ஃபெயில் ஆனால்முடிவு தற்கொலைதான். ப்ளீஸ்! எனக்கு வாழ்வு கொடுங்கள்! இல்லையெனில் அந்தப் பாவம் உங்களைச் சும்மா விடாது.''
- ''பரீட்சையின் போது என் பாட்டி இறந்து விட்டதால், இந்தப் பரீட்சை மட்டும் சரியாக எழுத முடியாமல்போய் விட்டது. இதில் பாஸ் மார்க் வந்தால் மற்றதெல்லாம் பற்றிக் கவலையில்லை. கருணை காட்டுங்கள் ஐயா!''

ஒரு தலைமை ஆசிரியர் கூறியது.
தொகுப்பு: எஸ்.சந்திரமௌலி.

அவள் உடம்பு சற்றுச் சிலிர்த்தது.

''ஏன் ஜெயா பயப்படறே?''

''பயப்படலையே....'' என்று இயல்பாய்ச் சிரிக்க முயன்றாள்.

''சொல்லு ஜெயா... உன் மனசில இருக் கிறதைச் சொல்லு. நமக்குள்ளே எந்த ரகசியமும் இருக்க வேண்டாம்.''

''சொல்றேன். உங்ககிட்டச் சொன்னாத் தான் என் மனசு ஆறும். பதற்றப்படாம நான் சொல்றதைக் கேட்பீங்களா?''

''ம்.''

''எங்க பாங்க்ல பொய்யாமொழின்னு ஒரு பையன். நல்லவன்தான்... ஆனா வேண் டாத ஆசை... ஆறு மாசம் முன்னாடி எனக்கு ஒரு லெட்டர் எழுதிக் கையில் கொடுத்தான். லவ் லெட்டர். நான் பதறிப் போயிட்டேன்.

''ஆபீஸ் விஷயத்துக்காகத்தான் நான் யாரோடயும் பேசறது வழக்கம். அதுவும் இவனோட ஒரு வார்த்தைகூட பேசினதில்லே. எப்பவாவது எதிர்ல வர்றப்போ சிரிப்பான். சிரிப்பேன். அவ்வளவுதான். அவனுக்கு எப்படி அந்த எண்ணம் வந்ததுன்னே தெரி யலே. எல்லார்கிட்டயும் என்னை லவ் பண் றதாச் சொல்லிட்டிருந்தான். அவன் நண் பர்கள் ரெண்டு மூணு பேர் நேரே போய்க் கேளுடான்னு ஆசை கிளப்பி விட்டுட் டாணுக. லெட்டர் எழுதிட்டான். எனக்கு அழுகையா வரது... ஆத்திரமா வரது... எல்லார் எதிர்லேயும் மானம் போற மாதிரி கேக்கணும் போல இருந்தது. ஆனா அந்தத் தைரியம் எனக்கில்லே....'' அதற்கு மேல் பேச்சு வராமல் அவளுக்கு உடம்பு குலுங் கிற்று.

''அவ்வளவுதானே... அதுக்குப் போய் இப்ப என்ன?''

''பூராவும் கேக்கலியே...அவன்லெட்டர்ல என்னென்னவோ உளறியிருந்தான். 'நீங்க தேவதை மாதிரி...தகாதவன் கிட்டப்போய் மாட்டிக்கிட்டுக் கஷ்டப்படப் போறீங்க! நான் உங்களை மனசில வச்சு பூஜை பண்ற வன்... ஒரு முள்ளுக் குத்தாமக் காப்பாத்து வேன் அது இதுன்னு.... அவனைத் தனியாக் கூப்பிட்டு அவன்கண்ணுக்கெதிரேயே அந்தக் கடிதத்தைக் கிழிச்சு இதெல்லாம் எனக்குக் கொஞ்சமும் பிடிக்கலேன்னு சொல்லிட் டேன். 'இன்னிக்கு வேண்டாம் மேடம்... நல்லா யோசிச்சுச் சொல்லுங்க. நான் உங் களுக்காகவே காத்திருப்பேன்'னு சொல்லிட்டு எழுந்து போயிட்டான்...அப்புறம் எதிரிலே கூட வரதில்லே...நான் அப்பா, அம்மா கிட்ட விஷயத்தைச் சொல்லி அழுதேன். அப்பா இன்னும் மும்முரமாப் பார்க்க ஆரம்பிச் சார். நீங்க வந்து பார்த்தீங்க... பிடிச்சிருந் தது. கல்யாணம் நிச்சயமாச்சுன்னு தெரிஞ்ச வுடனே அந்தப் பையன் என்கிட்ட வந்து, 'அவசரப்பட்டு விடாதீங்க மேடம். என்னை விட உங்களை நல்லாப் பார்த்துக்க யாரும் இருக்க மாட்டாங்க'ன்னு மறுபடியும் ஆரம் பிச்சான். 'மிஸ்டர், நான் மானேஜர் கிட்டச் சொல்ல வேண்டி வரும்'னு அவனை மிரட்டி அனுப்பினேன். நீங்க ஒருத்தனுக்குக் கழுத்தை நீட்டிட்டா அன்னிக்கே என் உயிர் பிரிஞ்சுடும்றான். நேத்து ராத்திரி அவன்

தற்கொலை பண்ணிக்கிட்டுச் செத்துப் போயிட்டானும்.''

''மை காட்...''

''ஊர்ல அத்தனை பேரும் என்னையே குத்தம் சொல்ற மாதிரி எனக்கு மனசு படபடன்னு அடிச்சிக்குது.... நம்மாலதானே அவன் செத்தான்னு திரும்பித் திரும்பித் தோணுது... என்னால எப்படி சந்தோஷமா இருக்க முடியும்...''

''ஜெயா...ஜெயா...''

அவளை மெல்ல அணைத்துக் கொண்டான் சந்தானம். பாவம் என்று தோன்றிற்று. மிருதுவான மனம். இவளை எப்படிச் சமாதானப்படுத்துவது? அந்தத் துக்கத்தின் வலி ஒருபுறம் அழுத்துகிறபோது சந்தோஷப் பூக்களை இவளால் எப்படி ஸ்பரிசிக்க முடியும்?

யாராவது இறந்து போனால் அந்தப் பாரம் நீங்க ஒரு நிமிஷம் மௌனத்தை அனுஷ்டித்து அவருக்கு மரியாதை தந்துவிட்ட விடுதலை உணர்வு பெறுகிற மாதிரி இவளுக்கும் ஒரு வாய்ப்புத் தரவேண்டும்.

''ஜெயா,நான் ஒண்ணு சொல்லட்டுமா?''

''ம்....''

''அந்தப் பையன் பண்ணினது அவனோட தப்பு... நீ ஆசை காட்டி மோசம் பண்ணிடலை... அவன் செத்துப் போனது உன்னோட குத்தமில்லை.... ஆனா அந்த அடி உன் மனசில பலமா விழுந்திருக்கு. நமக்காக ஒருத்தன் செத்துப் போயிருக்கிறப்போ நாம எப்படி சந்தோஷமா யிருக்கிறதுங்கற குத்த உணர்ச்சிதான் உன்னை இப்படியும் அப்படியுமா அலைக்கழிக்கிறது... வாஸ்தவம் தான்... என்னாலயும் அதைப் புரிஞ்சுக்க முடியுது. நாம இப்படிச் செஞ்சா என்ன?''

ஜெயா பதில் சொல்லாமல் முகத்தாலேயே 'எப்படி?' என்று கேட்டாள்.

''இன்னிக்குத்தான் நாம சந்தோஷமா சேர்ந்திருக்கணும்னு எந்த கட்டாயமும் இல்லை. செத்துப் போனவனை நெனைச்சு அவனுக்கு ஒரு மரியாதை தர மாதிரி நம்ம சந்தோஷத்தை ஒத்திப் போடலாம்... ஒரு நாளோ, ஒரு வாரமோ, அந்த உறுத்தல் போனதுக்கப்புறம் நாம்ப வாழ ஆரம்பிக்கலாம்.... அதுதான் உனக்கு ஆறுதலாயிருக்கும்.... தூங்கி எழுந்தா காலேல கூட சரியாப் போயிடலாம்... இல்லேன்னு உனக்கு எப்ப மனசு சரியாப் போவுதோ அப்ப சொல்லு... அன்னிக்கு இந்தக் கட்டில்ல இன்னொரு தரம் பூ தூவிக்கலாம்... சரியா....''

ஜெயாவின் முகத்தில் முதன் முறையாய் ஒரு சின்னத் தெளிவு பிறப்பதைச் சந்தானம் உணர்ந்தான். மனசில் பட்ட ரணத்துக்கு இந்தத் தீர்வுதான் சரியான ஒளடதம் என்று அவளுக்கும் சம்மதமானதென்று புரிந்தது. கண்கள் மெல்ல விரிந்து அவனின் வார்த்தைகளில் கிடைத்த ஆனந்தத்தைப் பிரதிபலித்தன. உணர்ச்சி பிரவகிக்க அவனுடைய கையை அழுந்தப் பற்றிக்கொண்டு அவன் கன்னத்தில் மெல்ல இதழ் பதித்தாள்.

''இனிமே மத்த விஷயங்களைப் பத்திப் பேசலாமா...''! என்று சந்தானம் மெல்லப் புன்னகைத்தான்.

---

பயணம் செல்லும்போது எடுத்துச் செல்ல வேண்டிய பொருட்கள் பற்றி பாரதி தாசன் ஒரு பாட்டே பாடியுள்ளார்:

''சீப்புக் கண்ணாடி ஆடைசிறுகத்தி
கூந்தல் எண்ணெய்
சோப்புப்பாட்டரி விளக்குத்தூக்கு
கூஜா தாள் பென்சில்
தீப்பெட்டிகளிகை சால்வை
செருப்புகோவணம் படுக்கை
காப்பிட்டபெட்டி ரூபாய்
கைக்கொள்க யாத்திரைக்கே!''

—எஸ். முத்துக்குமாரசாமி





**அமெரிக்க டெலிவிஷனும்**
**ரஷ்ய டெலிவிஷனும்**

''அமெரிக்க டெலிவிஷனுக்கும் ரஷ்ய டெலிவிஷனுக்கும் என்ன வித்தியாசம்'' என்று ஒரு சமயம் நடிகர் பாப்ஹோப்பிடம் கேட்கப்பட்டது. அவர் சொன்னார்:

''அமெரிக்காவில் டெலிவிஷனை நீங்கள் பார்க்கலாம்; ரஷ்யாவில் டெலிவிஷன் உங்களைப் பார்க்கும்!''

**—பணவை இதயன்**

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்




**காம்ப்ளான்®**
**ஒன்றில்தான்**
**அவர்களுக்கு**
**அன்றுடம் தேவைப்படும்**
**23 ஊட்டச் சத்துக்கள்**
**அடங்கியுள்ளன.**

வளரும் குழந்தை-
களுக்கென்றே
சிறப்பான சில
தேவைகள்
உள்ளன—வளரும்
வயதிலே உடம்புக்குத்
தேவைப்படும்
மிகச் சிறந்த புரதம்,
22 மூலாதார
ஊட்டச் சத்துக்கள்
—அளிக்கிறது
காம்ப்ளான். மறவாதீர்கள்,
டாக்டர்களின் சிபாரிசு
பெற்ற, திட்டமிட்ட உணவு
காம்ப்ளான்.

**இலவசம்!** 32 பக்கங்கள் கொண்ட கைப் புத்தகம்.

''குடும்பத்திற்கான பரிபூரண ஊட்டச் சத்துணவு வழிகாட்டி''
50 பைசா தபால்தலை இணைத்து இம் முகவரிக்கு எழுதிப் பெறுக:
தபால் பை நம்பர் 19118, (Comp) G-78, பம்பாய் 400 025.

—GLC-6-3012 TH

**திட்டமிட்ட பரிபூரண உணவு — காம்ப்ளான்®**

போட்டிக்கதை 16

# சமுதாய அந்தஸ்து

"ஜெரா"

"சாப்பிட வர்றியா தம்பி..." அம்மாவின் குரல் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்த தண்டபாணி ''போட்டு வை இதோ வந்துடறேன்'' என்றபடி தெருவில் இறங்கினான். ஊர்க் கோடியிலிருந்த கணேசனின் மாமா வீட்டுக்குப் போய்,ஓரிரு நிமிடங்கள் பேசிக்கொண்டிருந்துவிட்டு,நாசூக்காய் கணேசனைப் பற்றி விசாரித்தான் – அவர் ஏறக்குறைய அவனை மறந்தே போயிருந்தார் – அவருக்கு ஏதும் அழைப்பிதழ் வரவில்லை என்று ஊர்ஜிதம் செய்துகொண்டு இரும்பும்போது தண்டபாணியின் இதயம் பெருமிதத்தால் பருத்தது. உயர்ந்த நிலையில் இருந்தபோதும், தன்னைமட்டும் மறக்காமல் அழைப்பு அனுப்பி இருக்கும் கணேசனின் பண்பு, மனத்தில் பரவச லாகிரி ஏற்ற, அவன் வாய் சினிமாப் பாட்டொன்றைச் சீட்டியடித்தது.

வீட்டுக்கு வந்து அரிக்கேன் விளக்கொளியில் மீண்டும் ஒருமுறை அழைப்பிதழைப்

அந்த அழைப்பிதழைப் பல முறை திருப்பித் திருப்பிப் பார்த்து 'வந்திருப்பது தனக்குத்தான்' என்பதை உறுதி செய்துகொண்ட பின்பும், குழப்பம் மரங்கொத்தியாய் மனத்தைக் குதற வெகுவாய்த் தடுமாறிக்கொண்டிருந்தான் தண்டபாணி. இந்த அழைப்பிதழ் ஒவ்வொன்றும் ஐந்து ரூபாய்க்கு மேல் மதிப்புப் பெறும் என்ற உண்மை உள்ளத்தில் உரச, இதைத் தொட்டுப் பார்க்கிற தகுதி கூட தனக்கு இருக்கிறதா என்ற சந்தேகத்தில் சில நிமிடங்கள் சிலையாக இருந்தவன், எந்த ஒரு முடிவுக்கும் வர முடியாமல், சோர்ந்து போய்த் திண்ணையில் உட்காரும்போது சூரியன் தன் 'டூட்டி' முடிந்து பூமிக்கு 'டாட்டா' காட்டிக் கொண்டிருந்தான்.

நாளை நடக்கவிருக்கும் புதுமனை புகுவிழாவுக்கு இவன் வந்தே தீரவேண்டும் என்று வர்ண எழுத்துக்களால் வருந்தி அழைத்து அடம்பிடித்துக் கொண்டிருந்த அந்த அழைப்பிதழை அனுப்பியவன் கணேசன்... ஒரு காலத்தில் தண்டபாணியின் உயிருக்கு உயிரான சிநேகிதன் – இவனுடைய உண்டியலை உடைத்துக் காசைத் திருடிக் கொண்டு சொல்லாமல் கொள்ளாமல் ஊரை விட்டு ஓடியவன் – ஒரே தட்டில் சாப்பிட்டு, ஒரே படுக்கையில் உருண்டவனைக்கூட உதறி எறிந்துவிட்டுஏதோஓர்ஆதாயத்தைத் தேடித் தன்னை விசுவாசமில்லாமல் செய்துகொண்டவன். இப்போது அந்தஸ்து வந்துவிட்டது போலும்! அதனால்தான் ஆடம்பரமாக இவனை அழைத்திருக்கிறான்!

அகாலமாய்ப் போய்விட்ட பெற்றோருக்குப் பின், கையில் சொற்பப் பணத்தோடு, அனாதையாய் ஆதரவு தேடி இந்தக் கிராமத்துக்குத் தன் மாமாவைப் பார்க்க வந்த கணேசன், தண்டச் சோறாய் இங்கேயே தங்கி விட்டதெல்லாம் பழைய கதை! கிராமத்து வயல் வரப்புகளின் பசுமையையே தங்கள் வாழ்க்கையிலும் பார்த்துக் கொண்டிருந்த பெரிய மனிதர்களின் பிள்ளைகளோடு ஒட்ட முடியாமல் உள்ளம் குமுறிக்கொண்டிருந்த கணேசனுக்கு, தன்னைப் போலவே வறட்சியும், வயிற்றுப் பசியுமாய்த் தவித்துக் கொண்டிருந்த தண்டபாணியைக் கண்டதும் தலைகால் புரியவில்லை! அறிமுகத்தில் ஆரம்பித்து, அவ்வப்போது பேசிக்கொண்டதில் வளர்ந்து, நெருக்கமான நட்புக்குத் தாவியபோதுதான் இந்தப் பழக்கம், வாழ்க்கையின் ஏமாற்றங்களையும், இழப்புக்களையும் இயல்பாக எடுத்துக்கொள்ள எப்படித் துணை செய்கிறது என்று இருவருமே உணர ஆரம்பித்தார்கள்!

கூலி வேலை செய்யும் விதவைத் தாயின் சம்பாத்தியத்தில் தட்டுத் தடுமாறி ஹைஸ்கூல் படிப்பை முடித்துவிட்டு, அங்கொன்றும் இங்கொன்றுமாய் எடுபிடி வேலைகள் செய்து கொண்டிருந்தான் தண்டபாணி! இந்தக் கடுமையான உழைப்பு, நேர்மையான சம்பாத்தியம், இதிலெல்லாம் நம்பிக்கை இல்லாமலும், அதே சமயம் அநியாயமான வழிகளில் ஆவேசத்துடன் இறங்க தைரியமில்லாமலும், அரசியல் கூட்டங்களுக்குப் போஸ்டர் ஒட்டுவது, மேடை போடுவது, கட்சி ஆபீஸ்களில் சாயம் கலக்குவது போன்ற வேலைகளில் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தான் கணேசன். இதனால் கஷ்டப்படாமல்,கையில் சில்லறைகளும், கட்சித் தொண்டர்களிடையே செல்வாக்கும் அவனுக்கு வந்து சேர்ந்தன. வியர்வை வழிய தண்டபாணி ஒரு நாள் முழுதும் உழைத்துச் சம்பாதிக்கும் கூலியை ஒரு மணி நேரத்தில் தன் சாமர்த்தியமான பேச்சாலும், சமயோசிதமான செய்கையாலும் சம்பாதித்து விடுவான் கணேசன்.

ஒருநாள் அதிகாலை தண்டபாணி கண் விழிக்கும்போது, பக்கத்தில் படுத்திருந்த கணேசனைக் காணவில்லை! படுக்கையில் ஒரு துண்டுச் சீட்டு மட்டும் இருந்தது. இவனுடைய உண்டியலை உடைத்து விட்டதற்கு ஒப்பாரிவைத்துவிட்டுத்தான் மெட்ராஸுக்கு ஓடிப்போவதாய் எழுதியிருந்தான் கணேசன். அவனை இதுநாள்வரை தன் வீட்டிலேயே, பக்கத்தில் படுக்க வைத்துக் கொண்ட முட்டாள் தனத்துக்காக ஒரு மூச்சு அழுது தீர்த்துவிட்டு, அப்போதே தன் மனத்தில் இருந்தும் அவனைத் தூக்கி எறிந்துவிட்டான் தண்டபாணி! ஆயிற்று! பன்னிரண்டு வருடங்கள் ஓடிப்போய்விட்டன! இதுநாள்வரை எந்தத் தகவலும் இல்லாத அந்தக் கணேசனிடமிருந்துதான் வந்திருக்கிறது இந்த அழைப்பிதழ்!

படித்தான்! புதுமனை புகுவிழா நடப்பது சேலம் டவுனில். இடம் குறிப்பிட்டிருக்கவே பெரிதும் மகிழ்ந்து போனான் தண்டபாணி — மெட்ராஸிலிருந்து வந்து சேலத்தில் வீடு கட்டியிருக்கிறான் கணேசன் என்று அனுமானித்துக் கொண்டவன், காலையில் கிளம்புவதாக முடிவு செய்து, அவற்றுக்கான முஸ்தீபுகளில் இறங்கினான். அம்மாவைத் தாஜா செய்து அரிசிக்காக வைத்திருந்த இருபது ரூபாயை வாங்கிக்கொண்ட போது வானில் வெள்ளி முளைக்க ஆரம்பித்திருந்தது.

பிரும்மாண்டமான அந்தப்பங்களாவைப் பார்த்துப் பிரமித்துப் போன தண்டபாணி விலாசம் சரிதானா என்று ஒன்றுக்கு இரண்டு முறை பார்த்துக் கொண்டான். வாசலில் நின்றிருந்த கார்களையும் அதிலிருந்து இறங்கிக் கொண்டிருந்த 'மேல் மட்டங்களை'யும் பார்க்கும்போது இது கணேசனின் வீடுதானா? இல்லை யாராவது கலெக்டரின் பங்களாவா என்று புரியாமல் கொஞ்ச நேரம் நின்றுவிட்டான். நல்லவேளையாக நெடு நேரம் அவன் நெஞ்சைப் பதைக்க விடாமல் யாரோ ஒரு பெரிய புள்ளியை வரவேற்க வாசலுக்கு வந்த உருவத்தைப் பார்த்ததும், மூளை, ''இவன்தான் கணேசன்'' என்று முதுகில் அறைந்தது! தண்டபாணி தைரியமாக நகர்ந்தான். ஆம் — சந்தேகமே இல்லை அது கணேசனேதான். உடம்பு கொஞ்சம்



பருத்து நிறம் மாறியிருந்தான்! தொந்தியும், சொட்டையும் ஆளாளுக்கு 'இவன் பெரிய மனிதன்' என்று பறைசாற்றிக் கொண்டிருந்தன. கையை ஆட்டிப் பேசும் வழக்கமான தோரணையும், துருவிப் பார்க்கும் கண்களும் அவனைக் காட்டிக் கொடுக்கவே சந்தேகம் சரிந்துபோய், மெல்ல நெருங்கி வந்த தண்டபாணியைக் கொஞ்ச நேரம் கூர்ந்து பார்த்துவிட்டு, ''அடடே, வா வா'' என்று முனகினான் கணேசன்! சட்டென்று பக்கத்தில் நின்றிருந்த கிழவன் ஒருவனை அழைத்து, ''இவனை உள்ளே கூட்டிக் கிட்டுப்போ முனியா!''

என்று பின்புற வழியைக் கைகாட்டிவிட்டு, வாசலில் வந்து நின்ற பெரிய காரை நோக்கி ஓடினான்.

அவனுடைய செய்கை தண்டபாணியைத் தலைகுப்புறப் புரட்டினாலும், இதைப் போன்ற நெருக்கடியான நேரங்களில் நெஞ்சம் தளர்ந்து விடுவது நல்லதல்ல என்று முடிவு செய்து கொண்டவனாக முனியனைத் தொடர்ந்தான்! சமையல்கட்டில் முனியனோடு இரண்டு மூன்று மணி நேரம் இருந்தும் கூட யாரும் தன்னைக் 'கண்டு'கொள்ளாத அவல நிலையை உணர்ந்து உள்ளுக்குள் அழுதபடி உட்கார்ந்திருந்தவனின் காதுகளில் கணேசனின் குரல் காய்ச்சிய ஈயத்தைப் பாய்ச்சியது!

''என்யா யார் யாருக்கு இன்விடேஷன் அனுப்பறதுன்னு ஒரு விவஸ்தையே கிடையாதா? பழைய அட்ரஸ் லிஸ்டைப்பார்த்து



யாருய்யா உன்னை அனுப்பச் சொன்னது? பெரிய அதிகாரிகளுக்கு முன்னுல அன்னக் காவடிகளுக்கு ஒரு பந்தி போடணும்போல் இருக்கு.''

அறைக்கு வெளியே கணேசன் தன் உதவியாளனை வார்த்தைகளால் வறுத்து எடுப்பதைக் கேட்டுக் கண்கள் குளமாக எழுந்து கொண்டான் தண்டபாணி! இனி இங்கே ஒரு நிமிஷம்கூட இருக்கக் கூடாது என்று தாழ்வு மனப்பான்மை தாளம்போட, அவன் யாரையோ சொன்னுல், உனக்கு என்ன? என்று உள் மனம் தட்டிக் கொடுக்க, தடுமாறிப்போன தண்டபாணி மெல்ல ஹாலுக்குள் நுழைந்தான். ஒரு நீண்ட மேஜையில் ஏராளமான பரிசுப் பொருள்கள் எக்கச்சக்கமான விலையை விழுங்கி ஏப்பம் விட்டபடி இறைந்து கிடந்தன.

''கணேஷ் ஆல் தி பெஸ்ட்'' என்று சொல்லி அவனுக்குக் கைகொடுப்பதற்குள் வியர்வை பெருகி உடல் வெடவெடத்துவிட்டான் தண்டபாணி. ''என்னுடைய ஸிம்பிள் பிரசண்டேஷன்'' என்று காலையில் வாங்கியிருந்த சின்ன எவர்சில்வர் டம்ளரை நீட்டும்போது வெட்கமும், அவமானமும் மனத்தைப் பிசைய வார்த்தைகள் தடுமாறினுன். கணேசன் ஏறெடுத்துப் பார்க்காமல் நாசூக்காய் நன்றி சொல்லிவிட்டு, அவன் நீட்டிய டம்ளரை வாங்கக் கூசியவன் போல் அந்த மேஜைமேலே வெச்சிடேன்'' என்று அவசரமாகச் சொல்லிவிட்டுஅப்போதுதான்உள்ளே நுழைந்திருந்த யாரோ ஒரு பெரிய மனிதரை வரவேற்க ஓடினுன். தண்டபாணி கண்ணீர் கொப்புளிக்கக் கணேசனைப்பார்க்கும்போது பட்டுப் புடவையையும் நகைகளையும் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டு; யாரோ ஒரு பெண்மணி அவனேடு உரசிக்கொண்டிருந்து வர்களை வரவேற்பது தெரிந்தது! ஓ! இவனுக்குக் கல்யாணம் கூட ஆகிவிட்டதோ? இதைப் பற்றித் தனக்கு ஒரு வார்த்தைகூடத் தெரிவிக்கவில்லை என்ற நினைப்பு நெஞ்சைச் சுட, இடிரெனத் தான் மிகவும் அந்நியமாகி விட்டதை உணர்ந்தான். இந்த இடத்தை விட்டு இப்போதே கிளம்பிவிட வேண்டும் என்று மனம் உந்த பரிசுகள் பரப்பப்பட்டிருந்த, மேஜையை நோக்கி நடந்தான்.

டம்ளரை மேஜை மேல் வைக்கக் கையைக் கொண்டுபோனதுதான் தாமதம். யாரோ அவனுடைய பின் காலரைப் பிடித்து வேகமாக இழுத்துத் தள்ளினுர்கள். தரையில் விழுந்து அவன் சமாளித்து எழுந்திருப்பதற்குள் அவனைப் பிடித்துத் தள்ளிய ஆசாமி, ''திருட்டு ராஸ்கல் யாரும் பக்கத்துல இல்லேன்னு நைஸாத் தள்ளிக்கிட்டுப் போகப் பாத்தியா'' என்று சத்தம்போடவும், சின்னதாக ஒரு கூட்டம் அவனைச் சுற்றிக் கூடியது.

கணேசன் அவசரமாக உள்ளே வந்து அந்த ஆசாமியிடம் விசாரிக்கும்போது சற்றுத் தூரத்தில் உட்கார்ந்திருந்த டிப்டாப் பேர்வழி கையைச் சொடுக்கிக் கணேசனை அழைத்தார். கணேசன் பவ்யமாக ஓடிப்போய், அவர் சொன்னதைப் பணிவோடு கேட்டுவிட்டுத் திரும்பி வந்தான். தண்டபாணியைக் கீழே தள்ளிய ஆசாமியைப் பார்த்துச் சிரித்தான்—

''சார் ரொம்ப நேரமாக் கவனிச்சுக்கிட்டு இருந்தாராமில்லே!''

''ஆமாங்க. அவர்தான் எனக்கும் சொல்லி அனுப்பிஞரு. திருட்டுப் பய முழிக்கிரதைப் பாருங்க. சார் ரொம்ப நேரமா இவனை 'நோட்' பண்ணிக்கிட்டு இருந்திருக்காரு. பேசாமப்போலீசுக்குப் போன் பண்ணுங்க!''

கணேசன் தண்டபாணியை ஏறிட்டுப் பார்த்தான். பிறகு சட்டென்று தலை குனிந்தபடி 'முனியா' என்று கத்தினுன். முனியன் வந்ததும் 'இவனை உடனே வெளியே அனுப்பு' என்று சொல்லிவிட்டு, டிப்டாப் பேர்வழியை அணுகி 'போலீசுக்கு போனு வீண் தொல்லைதான்' என்று இளித்தான்.

வெடிக்கும் விம்மல் வெளியே வந்துவிடாமல், இறுக்கிப் பிடித்தபடி முனியனைத் தொடரும்போது, ஆதரவாகத் தண்டபாணியைத் தட்டிக் கொடுத்த முனியன், ''பெரிய இடத்துல எல்லாம் ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும் தம்பி! ஐயா மாதிரி காண்ட்ராக்டர் எல்லாம், அந்த ஆளு மாதிரிப் பெரிய அதிகாரிகளைத் திருப்திப் படுத்தித்தான் ஆவணும் — ரொம்பவும்

## வித்தியாசமான விளம்பரம்!

''சிவகாசி இந்து நாடார் 27 வயது பட்டதாரி சொந்தத் தொழில் செய்யும் ஆரோக்கியமான வாலிபருக்கு உடல் உறவில் விருப்பம் இல்லாத அல்லது உடல் உறவு கொள்ள இயலாத மணமகள் தேவை. விண்ணப்பிக்கவும்.''

- இப்படி ஒரு வித்தியாசமான விளம்பரம் சில வாரங்களுக்கு முன் தினகரனில் இடம் பெற்றிருந்தது!

தகவல் : எஸ். ஆர். நாதன்



எறங்கி வர முடியாது'' என்றபோது இவன் நெஞ்சத்து ரணத்தில் ரத்தம் வழிந்தது.

நடைப்பிணமாய் வீட்டைக் கடந்து தண்டபாணி வாசலுக்கு வந்தபோது, வெளியில் நின்றிருந்த கணேசன் சுற்று முற்றும் பார்த்துவிட்டுமெதுவாக அவனை அணுகினான்.

''ஸாரி! தண்டபாணி பெரிய ஆபீசருங்க எல்லாம் வந்திருக்கும்போது எனக்கு இப்ப இருக்கிற கௌரவத்தை விட்டு விட்டு இறங்கி வர முடியலே. சீப் இன்ஜினியரே உன்னைத் திருடன்னு சொல்லும்போது அத்தனை பேருக்கு நடுவிலே நான் மறுத்துப் பேசினால் அவர் மதிப்பு என்னாகும்? எனக்குத் தெரியும் நீ திருடன் இல்லேன்னு. அதனால மனசுல எதையும் வச்சுக்காதே! ஆமா பஸ் சார்ஜுக்குப் பணமிருக்கா?''

தன் பாக்கெட்டுக்குள் அவசரமாகக் கை விடும் கணேசனை, சொறி நாயைப் பார்ப்பது போல் அருவெறுப்போடு பார்த்த தண்டபாணி, பதில் ஏதும் பேசாமல் மெல்ல நகர்ந்தான். — உள்ளே கனன்று கொண்டிருந்த தீ உடம்பெல்லாம் வியாபித்ததைப் போல இனம் தெரியாத எரிச்சல் பரவி அவன் நடையைத் தளர்த்தியது. அதிகார வர்க்கத்துக்கு வால் பிடிப்பதற்காகத் தன் கௌரவத்தைத் தூசியாக்கி விட்ட கணேசனின் அப்பட்டமான சுயநலம் நெஞ்சில் சூடு போட நெக்குருகிப் போனான்.

தன்மேல் திருட்டுப் பழி சுமத்தியதற்குக் கூடத் தண்டபாணி வேதனைப்படவில்லை. ஏழைமையை உணர்த்தும் சாயம் வெளுத்துப்போன இந்த உடைகள் தனக்குச் சமுதாய அந்தஸ்தைக் கொடுக்காமல் பார்ப்பவர்கள் பரிகாசம் பண்ணவும், ஏளனம் செய்யவும் சாதகமாய் இருக்கும்போது, இந்தத் திருட்டுப் பழி எல்லாம் ரொம்ப சாதாரணமானதுதான் என்று மனத்தைச் சமாதானப்படுத்திக் கொள்ள அவனால் முடிந்தது. ஆனால் வீடு தேடி வந்தவனுடைய சுய கௌரவத்தையும், தன்மானத்தையும் தரையில் போட்டு மிதித்து, ஆதாயம் தருபவனுக்கு 'ஆமாம் சாமி' போட்டுவிட்டு, அப்பால் குத்திய புண்ணுக்குப் புனுகு தடவ வரும் கணேசனின் போலித்தனத்தையும், நம்பிக்கைத் துரோகத்தையும் அதற்கு மேலாக முதுகில் குத்தும் முறையற்ற செயலையும் அவனால் சகித்துக்கொள்ளவே முடியவில்லை. ஒதுக்குப்புறமாக நின்று மனத்தின் சுமைகளை யெல்லாம் கடுநீராகக் கண்களின் வழியே சிதற விட்ட பின்தான், கணேசனோடு பழகிய பாவங்கள் கரைந்து கங்கையில் குளித்ததைப் போன்றதொரு தூய்மையை உணர்ந்தான் தண்டபாணி!

சட்டென்று எட்டிப்பிடித்துவிடும் சமுதாய அந்தஸ்தைச் சரிந்து போகாமல் காப்பாற்றுவதற்குச் சிலர் எப்படி எல்லாம் வேஷம் கட்டவேண்டியிருக்கிறது என்பதை வேதனையோடு உணரும்போதும், அவர்களால் வஞ்சிக்கப்பட்டு வகையிழந்து நிற்கும்போதும், கங்கையைத் தேடி ஓடவா முடியும்? கண்ணீர்தான் அப்போது கங்கைநதி!



## அருள் வாக்கு

சொந்த வாழ்க்கையில் சிக்கனமாக இருந்தால்தான் பிறத்தியாருக்கு உதவியாகத் திரவிய ஸகாயம் செய்ய முடியும். அநாவசியங்களையெல்லாம் அத்தியாவசியமாக்கிக் கொண்டு மேல் நாடுகளைப் பார்த்து Material Comfort, Luxury என்று போய்க் கொண்டிருந்தால், தனக்கும் ஒருநாளும் திருப்தி இராது; பிறத்தியாருக்கும் தான தருமம் பண்ண முடியாது. மோட்டார் ஸைக்கிளுக்கு மேலே கார் வேணும். அப்பறம் அந்தக் காரிலும் இன்னம் பெரிசாக வேணும். அதற்கப்பறம் அதையே ஏர் கண்டிஷன் பண்ணணும் என்கிறது போல, ஸிமெண்ட் மொஸைக் ஆகணும், மொஸைக் மார்பிள் ஆகணும் என்கிறது போல ஒன்றுக்கு மேல் ஒன்று செளகரியத்தைத் தேடிக் கொண்டே இருந்தால் எப்போது பார்த்தாலும் அதிருப்தி என்ற பெரிய அசெளகரியத்திலேயேதான் ஒருத்தன் இருந்து கொண்டிருப்பான். அதுமட்டுமில்லை. எத்தனை சம்பாத்தியம் வந்தாலும் போதவும்போதாது. அதனால்தான் இன்றைக்கு அத்தனை பணக்காரர்களும் கடனாளிகளாக — கடன் என்கிறதையே 'ஓவர் டிராஃப்ட்' என்ற கௌரவமான பெயரில்சொல்லிக் கொண்டு — இருக்கிறார்கள். இவனே கடனாளியாக இருந்தால் மற்றவர்களுக்கு எங்கேயிருந்து தர்மம் பண்ணுவது?

இப்போது பொதுவாக உள்ள பரிதாப நிலை என்னவென்றால் ஒன்று சிக்கனமாய் இருப்பவன் தானும் அனுபவிக்காமல் பிறத்தியானுக்கும் உதவி பண்ணாமல் கருமியா யிருக்கிறான்; செலவாளியாக இருப்பவனோ 'செளகரியம், இன்னும் செளகரியம்' என்று பறப்பதில் தனக்கே போதாமல் கடனாளியாக நிற்பதால் இவனாலும் பரோபகாரம் நடப்பதில்லை.

பிறருக்குச்செய்வதற்காகவேசொந்த விஷயத்தில் சிக்கனமாக இருக்க வேண்டும் என்ற உயர்ந்த கொள்கையை ஒவ்வொருவனும் கடைப்பிடித்தால் எவ்வளவோ புண்ணியத்துக்குப் புண்ணியம், நிம்மதிக்கு நிம்மதி. எத்தனையோ பேர்களும் க்ஷேமமடைவார்கள்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்

# அன்பளிப்பு

## டெபாசிட்தாரர்களுக்கு

வெள்ளி
குத்துவிளக்கு
அன்பளிப்புடன் பாதுகாப்பையும்
நம்பிக்கையும் உயர்ந்த
வருமானத்தையும் தருவது

# 'ஜெயசக்தி'

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள்
ஏற்றுக் கொள்ளப்படுகின்றன

| ஒரு வருடம் | இரண்டு வருடங்கள் | மூன்று வருடங்கள் | ஐந்து வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |

உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி



## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(Hire Purchase Financiers for Vehicles and Home Appliances)

39, நடேச ஐயர் தெரு (2வது மாடி)
(சிவா விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017.
போன்: 447186

கிளைகள்:

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971

தஞ்சாவூர் : எண் : 2&3, முதல் மாடி, தி.எ. கனல் ரோடு, தஞ்சாவூர், போன் : 1626

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606601 போன் : 483

பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை, போன் : 453

CHARI

# கள்வனின் காதலி

## அத்தியாயம் 23

### பண்ணையாரின் தவறு

கல்யாணியின் கல்யாணத்தன்று திருமாங்கல்யதாரணம் ஆனதும் அவள் மூர்ச்சையாகி விழுந்தாள் என்று சொல்லிவிட்டு, பிறகு அவளை நாம் கவனியாமலே இருந்துவிட்டோம். அதன் பின்னர் இன்றுவரையில் அவளுடைய வாழ்க்கையில் நடந்த சம்பவங்களைத் தெரிந்துகொள்வது இப்போது அவசியமாகிறது.

ஃ ஃ ஃ

தாமரை ஓடைப் பண்ணையார் பஞ்சநதம் பிள்ளை இந்த உலகில் தப்பிப் பிறந்த உத்தம புருஷர்களில் ஒருவர். அவர் தமது வாழ்க்கையில் ஓரே ஒரு தவறுதான் செய்தார். அது, அந்த முதிய வயதில் ஓர் இளம் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டதுதான். இது பெரும் பிசகு என்றாலும் அவருடைய பூர்வ சரித்திரத்தை நாம் தெரிந்து கொள்வோமானால் அவரிடம் கோபம் கொள்வதற்குப் பதில் அனுதாபமே அடைவோம்.

பஞ்சநதம் பிள்ளை படித்தவர்; விசால நோக்கமும் உயர்ந்த இலட்சியங்களும் உள்ளவர். கொஞ்ச நாளைக்கு அவர் பிரும்மஞான சங்கத்தில் சேர்ந்திருந்தார். பிறகு அச்சங்கத்தின் கொள்கைகள் சில பிடிக்காமல் விட்டுவிட்டார். தேசிய இயக்கத்திலே கூட அவருக்கு ஒரு சமயம் சிரத்தை இருந்தது. ஆனால் அந்த இயக்கம் ரொம்பத் தீவிரமாகி, சட்டம் மறுத்தல், சிறைக்குச் செல்லுதல் என்றெல்லாம் ஏற்பட்டபோது, இது நமக்குக் கட்டிவராது என்று ஒதுங்கிவிட்டார்.

ஓரேஒருதடவை அவர் ஜில்லாபோர்டு தேர்தலில் நின்று ஜெயித்து அங்கத்தினர் ஆனார். ஆனால் ஒரு வருஷ அனுபவத்தில் அதிலே நடந்த அக்கிரமங்களையும், ஊழல்களையும் சகிக்க முடியாதவராய் ராஜிநாமாக் கொடுத்து விட்டார்.

சொந்த வாழ்க்கையில் அவருடைய நடத்தை மாசற்றதாய், அப்பழுக்குச் சொல்ல இடமற்றதாய் இருந்தது. லக்ஷ்மணனைப் பற்றிச் சொல்லியிருக்கிறதே ராமாயணத்தில் — சீதா தேவியின் பாதங்களை யன்றி அவளுடைய திருமேனியை அவன் பார்த்ததேயில்லை யென்று — அம்மாதிரியே, ''பர ஸ்திரீகளை நான் கண்ணெடுத்தும் பார்த்தது இல்லை'' என்று அவர் உண்மையுடன் சொல்லிக்கொள்ளக் கூடியவராய் இருந்தார்.

ஃ ஃ ஃ

அவருடைய மாசற்ற வாழ்க்கைக்குப் பன்மடங்கு பெருமையளிக்கக் கூடியதான இன்னொருமுக்கியமான



விஷயத்தைக் குறிப்பிடவேண்டும். பணக்காரக் குடும்பங்களில் சாதாரணமாய் நடப்பது போல் அவருக்குச் சின்ன வயதிலேயே கல்யாணம் ஆயிற்று. அந்தக் கல்யாணம் அவருடைய வாழ்க்கையில் பெரிய துர்ப்பாக்கியமாக ஏற்பட்டது.

இரண்டு மூன்று குழந்தைகள் பிறந்து செத்துப்போன பின்னர், அவருடைய மனைவியை மனுஷ்யர்களுக்கு வரக் கூடிய வியாதிகளுக்குள்ளே மிகக் கொடியதான வியாதி பிடித்தது. அவளுக்குச் சித்தப்பிரமை ஏற்பட்டது.

சுமார் இருபது வருட காலம் அந்தப் பைத்தியத்துடன் அவர் வாழ்க்கை நடத்தினார். அவளுக்காக அவர் பார்க்காத வைத்தியம் கிடையாது; கூப்பிடாத மந்திரவாதி கிடையாது; போகாத சுகவாசஸ்தலம் கிடையாது.



அவர்: உங்கள் ஆபீஸில் எல்லோரும் மொட்டைத் தலையர்களாக இருக்காங்களே ஏன்?''

மானேஜர்: மொட்டை யடித்துக் கொள்ளும்படி நான்தான் உத்தரவு போட்டேன். சிண்டு முடிந்து விடும் வேலைஅதிகரித்திருப்பதுபொறுக்காமல்!

- உ. ராஜாஜி

சில சமயம் அவளுக்குப் பிரமை சுமாரா யிருக்கும்; அப்போதெல்லாம் சாதாரணமாய் நடமாடிக் கொண்டிருப்பாள். வேறு சில சமயம் பைத்தியம் முற்றிவிடும்; சங்கிலி போட்டுக் கட்டி அறையில் அடைத்து வைக்க வேண்டியதாயிருக்கும். இம்மாதிரி சமயங்களில் பஞ்சநதம் பிள்ளையைத் தவிர வேறு யாரும் அவள் சமீபம் போக முடியாது.

இன்னும் சில சமயம் அவள் பிரம்மஹத்தி பிடித்தவளைப் போலச் சிவனே என்று உட்கார்ந்திருப்பாள். அப்போதெல்லாம் பஞ்சநதம் பிள்ளை தான் அவளுக்கு வேண்டிய சிசுருஷைகளை யெல்லாம் செய்தாக வேண்டும்.

அந்தக் காலத்தில் வேறே கல்யாணம் செய்து கொள்ளும்படி அவரை எவ்வளவோ பேர் வற்புறுத்தினார்கள். ''இந்தப் பிரம்மஹத்தியைக் கட்டிக் கொண்டு வாழ்நாளெல்லாம் கழிக்க முடியுமா?'' என்றார்கள். ''இவ்வளவு சொத்தையும் ஆள்வதற்குச் சந்ததி வேண்டாமா?'' என்று கேட்டார்கள்.

அதையெல்லாம் பஞ்சநதம் பிள்ளை காதில் போட்டுக் கொள்ளவேயில்லை. தொட்டுத் தாலி கட்டிய மனைவிக்குத் தாம் செலுத்த வேண்டிய கடமை இது என்று கருதினார்.

சில சமயம் அவர் வருங்காலத்தைப் பற்றி எண்ணிக் கவலைப்படுவதுண்டு. தமது மனைவிக்கு முன்னால் தாம் காலம் செல்ல நேர்ந்தால் அவளுடைய கதி என்ன ஆகும் என்று எண்ணிப் பெருமூச்சு விடுவார். ''ஸ்வாமி! இவள் எத்தனை காலம் இப்படிக் கஷ்டப்படுவாள்? இவ்வளவு போதாதா? இவளுடைய துன்பங்களுக்கு முடிவு பண்ணக் கூடாதா?'' என்று சில சமயம் பிரார்த்திப்பார்.

கடைசியாக, அவருடைய பிரார்த்தனை நிறைவேறிற்று. ஒரு நாள் அவர் ஊரில் இல்லாத சமயம். அந்தப் பைத்தியக்காரி திடீரென்று கூச்சலிட்டுக்கொண்டு ஓடி, கொல்லையிலிருந்த கிணற்றில் விழுந்து உயிரை விட்டாள்.

பஞ்சநதம் பிள்ளைக்கு இது ஒருவாறு மன ஆறுதல் அளித்தது என்றே சொல்ல வேண்டும். ஆயுள் கைதிக்குத் திடீரென்று விடுதலை கிடைத்தது போல் கொஞ்ச நாள் வரை அவருக்கே பிரமையாயிருந்தது. பின்னர், தாம் உண்மையிலேயே சுதந்திரம் அடைந்து விட்டதை அவர் உணர்ந்ததும், வருங்காலத்தைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார்.

அவர் மனைவி உயிரோடிருந்த வரையில், ''இவள் மட்டும் இறந்து போனால் நம்முடைய சொத்துக்களையெல்லாம் நல்ல தர்ம ஸ்தாபனங்களுக்குச் சேர்த்து விட்டு நாம் சந்நியாசியாகி விட வேண்டும்'' என்று அவர் எண்ணமிடுவதுண்டு. இப்போதும் அவருக்கு அந்த எண்ணம் மாறிவிடவில்லை. புதிதாய்க் கிடைத்த சுதந்திரத்தை இன்னும் கொஞ்ச நாள் அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையினால், சந்நியாசியாவதைத் தள்ளிப் போட்டுக் கொண்டிருந்தார். ஆனாலும் தேசத்திலுள்ள முக்கியமான தர்ம ஸ்தா

# ஜலதோஷம் உங்கள் நாளையே கெடுக்க அனுமதிக்காதீர்கள்




### ஜலதோஷத்தைப் போக்கலாம்

நல்ல ஒரு நாளையே கெடுக்கும் மூக்கு ஒழுகுதல் அல்லது மூக்கடைப்பு, தலை கனம், தொண்டைக்கட்டு மற்றும் மார்சளி போன்றவற்றுடன் உள்ள ஜலதோஷத்திலிருந்து நிவாரணம் பெற ஒரு வழி இருக்கிறது.

### ஜலதோஷ மருந்து கொண்டு தாக்கிடுங்கள்

மற்ற உபாதைகளைப் போன்றே இதற்கும் சிகிச்சையளித்தால் போதாது. பாதிக்கப்பட்ட பாகங்களி லெல்லாம் ஒரே சமயத்தில் செயல் புரியவல்ல விசேட ஜலதோஷ மருந்தையே உபயோகியுங்கள்.

### கோல்டரின் ஜலதோஷத் திற்கு மட்டுமே

உங்கள் சுறுசுறுப்பைக் கெடுக்கும் அறிகுறிகள் அனைத்தையும் போக்கு கிறது—கோல்டரின். இதிலுள்ள விசேட மருந்துப் பொருட்கள் ஜலதோஷத்தினால் பாதிக்கப்பட்ட எல்லா பாகங்களிலும் ஒருங்கிணைந்து செயல்புரிகின்றன. அதோடு, ஜலதோஷ எதிர்ப்பு சக்தியை வளர்த்திட இதில் வைட்டமின் C உள்ளது.

ஜலதோஷத்தினால் பாதிக்கப்படும் போது ஜலதோஷ மருந்தையே சாப்பிடுங்கள்.

# கோல்டரின்

விசேட ஜலதோஷ மருந்து

CASBC-64-172 TM

பனங்கள், சந்நியாசிமடங்கள் இவற்றையெல்லாம் பற்றி அவர் விசாரிக்கவும் விவரங்கள் சேகரிக்கவும் தொடங்கினார்.

இந்த மாதிரி நிலைமையில்தான் பஞ்சநதம் பிள்ளை கல்யாணியைப் பார்க்கவும், அவளுடைய குதூகலமான சிரிப்பின் ஒலியைக் கேட்கவும் நேர்ந்தது. உடனே அவருடைய வாழ்க்கை நோக்கம் முழுவதும் அடியோடு மாறிப் போய் விட்டது.

ஃ ஃ ஃ

கொள்ளிடத்தில் பிரவாகம் போகும் போது சில சமயம் பெரிய உத்தியோகஸ்தர்கள் கரையோரமாகப் படகில் பிரயாணம் செய்வதுண்டு என்று சொல்லியிருக்கிறோமல்லவா? ஒரு சமயம், டிபுடி கலெக்டர் ஒருவர் அவ்வாறு படகில் பிரயாணம் செய்யும்போது பஞ்சநதம் பிள்ளையும் அவருடன் கூடப் போகும்படி நேர்ந்தது. இவர்கள் பழைய சிநேகிதர்கள். சந்தித்துச் சில காலமானபடியால், படகில் போகும் போது பேசிக் கொண்டிருந்தார்கள்.

வழியில், பூங்குளம் கிராமத்து ஸ்நானத் துறையண்டைப் படகு சென்ற போது, துறையில் இரண்டு இளம் பெண்கள் குளித்துக் கொண்டிருப்பதையும், அவர்கள் ஒருவர் மேல் ஒருவர் ஜலத்தை வாரி இறைத்துக் கொண்டு சிரித்து விளையாடுவதையும் அவர்கள் கண்டார்கள். அப்படி அவர்கள் விளையாடிக் கொண்டிருந்தபோது, கரையில் இருந்த குடங்களில் ஒன்று மெதுவாய் நகர்ந்து ஆற்றில் மிதந்து செல்லத் தொடங்கியது. அதைப் பார்த்து விட்ட பெண்களில் ஒருத்தி ''ஐயோ! கல்யாணி! குடம் போகிறது! எடு! எடு!'' என்றாள். கல்யாணி, ''நீதான் எடேன்!'' என்று சொல்லி ஜலத்தை வேகமாய் மோதவும், குடம் இன்னும் ஆழத்துக்குப் போய் விட்டது. அப்போது படகானது மிதந்து போய்க் கொண்டிருந்த குடத்துக்குச் சமீபத்தில் வர, டிபுடி கலெக்டர் குனிந்து அந்தக் குடத்தைப் பிடிக்க முயன்றார். அம்முயற்சியில் அவர் தலையிலிருந்த தொப்பி நழுவித் தண்ணீரில் விழுந்தது. உடனே அவர் குடத்தை விட்டு விட்டுத் தொப்பியைப் பிடிக்க முயன்றார். ஆனால் குடமும் போய் விட்டது; தொப்பியும் போய்விட்டது. குடத்தைப் பஞ்சநதம் பிள்ளை பிடித்துக்கொண்டார். தொப்பி அரோகரா!

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தாள் கல்யாணி. முதலில் அவளுடைய முகத்தில் இதழ்கள் விரிந்து குறுநகை ஏற்பட்டது. அந்தக் குறுநகை இளஞ் சிரிப்பாயிற்று. பின்னர், அந்த நதி தீரமெல்லாம் எதிரொலி செய்யும்படி கலகலவென்று ஒரு சிரிப்புச் சிரித்தாள். அவ்வளவு சந்தோஷமான, குதூகலமான சிரிப்பைப் பஞ்சநதம் பிள்ளை தமது வாழ்நாளில் கேட்டதே கிடையாது.

கன்னங்கள் குழியும்படி சிரித்த அந்த அழகிய முகத்தின் தோற்றமும் கிண்கிணியின் இனிய ஓசையை ஒத்த அவளுடைய சிரிப்பின் ஒலியும் அவருடைய உள்ளத்தில் நன்கு பதிந்து விட்டன. அந்த நிமிஷம் முதல் அவருடைய வாழ்க்கை நோக்கமும் மாறுதல் அடைந்தது. ''இத்தனை வருஷ



''திடீர்னு லாட்டரியிலே உனக்குப் பத்து லட்சம் பரிசு விழுந்துடுச்சுன்னு வச்சுக்க. என்ன பண்ணுவே?''

''உனக்குத் தரவேண்டிய பத்து ரூபாவிலே உடனே அஞ்சு ரூபா குடுத்துடுவேன்.''

—எம். சிவானந்தம்

காலமாய் முடிவே இல்லாதது போன்ற துன்பத்தின் மத்தியில் உழன்றாயிற்றே! இனிமேலாவது ஏன் சந்தோஷமாய் வாழ்க்கை நடத்தக் கூடாது?'' என்று அவர் கருதத் தொடங்கினார்.

ஒருவேளை பஞ்சநதம் பிள்ளைக்கு வயதுவந்த புதல்வன் ஒருவன் இருந்திருந்தால் கல்யாணியை அவனுக்கு மணம் செய்வித்து அவர்கள் சந்தோஷமாய் இருப்பதைப் பார்த்தே தாமும் மகிழ்ந்திருப்பார். அப்படி இல்லையாதலால்; அவர் தமக்கே அவளை உரிமை கொள்ள விரும்பினார். அத்தனை நாளும் தம்மை மறுமணம் செய்து கொள்ளச் சொன்னவர்களின் வாதங்களையெல்லாம் நினைவுகூர்ந்து, அவற்

தின் நியாயங்களைப் பற்றிச் சிந்திக்க லானார்.

முடிவில் கல்யாணியைப் பற்றி விசாரித்து அறிந்து, அவளைக் கல்யாணமும் செய்து கொண்டார்.

## அத்தியாயம் 24

## கைம்பெண் கல்யாணி

கல்யாணம் ஆன ஒரு வாரத்துக்குள்ளேயே பஞ்சநதம் பிள்ளை தாம் செய்துவிட்டது எவ்வளவு பெரிய தவறு என்பதைத் தெரிந்து கொண்டார்.

கல்யாணத்தன்று கல்யாணி மூர்ச்சையாகி விழுந்தபோது அவருக்குக்கொஞ்சம் நெஞ்சு திடுக்கிடத்தான் செய்தது. ஆனால் அவள் மூர்ச்சை தெளிந்து



அவன்: டேய்! கராத்தே இப்பத்தானே கத்துக்க ஆரம்பிச்சிருக்கே அதுக்குள்ளே எப்படிடா உனக்கு 'பிளாக் பெல்ட்' கிடைச்சிச்சு?
இவன்: எல்லாம் பிளாக்கிலேதான்!
—ஏ.ஜி. வல்லபதாஸ்

எழுந்ததும் அவருக்குப் பழையபடி உற்சாகம் ஏற்பட்டது. சௌந்தரிய தேவதையாய், இன்ப விளக்காய் நிலவு வீசும் முகத்தில் நீலக் கருவிழிகள் ஊசலாட நின்ற கல்யாணி இனிமேல் தமக்கே முழுமையும் உரியவள் என்பதை எண்ணியபோது, அவருக்குச் சொல்ல முடியாத பெருமை உண்டாயிற்று. அந்தச் செய்தியைக் கூரை மீது நின்று கூறி, சகலரும் அறியச் செய்யவேண்டுமென்று அவருக்கு ஆசையாயிருந்தது.

கல்யாணத்தை யொட்டி அந்த ஜில்லாவில் உள்ள பெரிய உத்தியோகஸ்தர்களுக்கும், பெரிய மனிதர்களுக்கும் பிரபலமான விருந்து நடத்தினார். அந்த விருந்துக்கு வந்திருந்த பெரிய மனிதர்களை உட்கார வைத்து நடுவில் மாப்பிள்ளையுடன் ஒரு குரூப் போட்டோ எடுக்கப்பட்டது. அந்தச் சமயம் யாரோ சொன்னார்கள், மணமகனும் மணமகளும் சேர்ந்து உட்கார்ந்து ஒரு போட்டோ எடுத்துக் கொள்ள வேண்டும் என்று. பஞ்சநதம் பிள்ளைக்கும் இது விருப்பமாகவே இருந்தது. அப்படியே அவர் நாற்காலியில் உட்கார்ந்திருக்க, கல்யாணி பக்கத்தில் நிற்க ஒரு போட்டோ எடுக்கப்பட்டது.

கல்யாணம் நடந்த ஒரு வாரத்துக்கெல்லாம் அந்தப் போட்டோ தபாலில் வந்தது. அதைப் பஞ்சநதம் பிள்ளை ஆவலுடன் எடுத்துப் பார்த்தார். அவருடைய முகத்தில் ஒரு பெரிய மாறுதல் உண்டாயிற்று. எவ்வளவு பெரிய தவறு செய்து விட்டோம் என்பதை அந்தக் கணமே அவர் உணர்ந்தார்.

இதற்கு முன்னால் அவர் தம்மைத் தனியாகக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டிருக்கிறார். கல்யாணியை எதிரே வைத்துப் பார்த்திருக்கிறார். ஆனால் தம்மையும் அவளையும் சேர்த்துப் பார்த்தது கிடையாது. இப்போது படத்தில் சேர்த்துப் பார்த்தவுடன் அவருக்குப் பகீர் என்றது. வயதிலும், தோற்றத்திலும் எவ்வளவு வித்தியாசம்! ஐயோ! ஓர் இளம் பெண்ணின் வாழ்க்கையை அநியாயமாய்ப் பாழாக்கி விட்டோமே!

இம்மாதிரி அவருக்கு ஏற்பட்ட கவலையை ஊர்ஜிதப்படுத்துவதற்கு இன்னொரு சந்தர்ப்பமும் சேர்ந்து கொண்டது. கல்யாணி தம்முடைய வீட்டுக்கு வந்ததிலிருந்து சிரிப்பதில்லையென்பதை அவர் கண்டார். எந்தக் குறுநகையைக் கண்டும் குதூகலமான சிரிப்பைக் கேட்டும் அவர் தம் உள்ளத்தைப் பறி கொடுத்தாரோ, அதெல்லாம் இப்போது எங்கே? யார் கொண்டு போனார்கள்? அந்த அழகான மிருதுவான கன்னங்களில் இப்போது குழி விழுவதே காணோமே! அது ஏன்?

சிரிப்பதுதான் இல்லை; அழுவாவது செய்கிறாளா? அதுவும் கிடையாது. சிரிக்காவிட்டாலும் அழுதாலாவது தேவலை என்று பஞ்சநதம் பிள்ளை எண்ணினார். அழுதால் அருகில் சென்று சமாதானம் செய்யலாம்; கண்ணீர் பெருக்கினால் கண்களைத் துடைக்கலாம்; விசித்தாலும், விம்மினாலும் மடியில் எடுத்துப் போட்டுக் கொண்டு ஆறுதல் சொல்லலாம். அப்படியெல்லாம் தமது எல்லை இல்லாத அன்பையும்,

ஆசையையும் வெளியிடுவதற்குச் சந்தர்ப்பமாவது கிடைக்கும்.

ஆனால் கல்யாணியோ சிரிப்பதும் இல்லை; அழுவதும் இல்லை. பஞ்சநதம் பிள்ளையிடம் மிக பயபக்தியுடன் அவள் நடந்து கொண்டாள். தன்னுடைய நடத்தையில் எவ்விதக் குறையும் சொல்வதற்கு அவள் இடம் வைக்கவில்லை. அந்த வீட்டின் யஜமானியாய், அந்தக் குடும்பத்தின் தலைவியாய், அந்த வயோதிகரின் மனைவியாய் வாழ்வது தனக்குரிய கடமை என்று உணர்ந்தவளைப் போல அவள் நடந்து வந்தாள். ஆனால் அவளுடைய குதூகலத்தையும், இருதயத்தையும், ஏன், ஜீவனைக்கூடப் பூங்குளத்திலேயே விட்டு விட்டு, இங்கே வெறும் உடம்புடன் மட்டும் வந்து நடமாடிக் கொண்டிருப்பது போலப் பஞ்சநதம் பிள்ளைக்குத் தோன்றியது.

கல்யாணியின் முகத்தில் மறுபடியும் சிரிப்பை வரவழைக்க வேணுமென்று பஞ்சநதம் பிள்ளை எவ்வளவோ முயற்சி செய்தார். எள் என்று சொல்லுமுன் எண்ணெயாக நின்றார். நகைகளும் புடவைகளும் கணக்கில்லாமல் கொண்டு வந்து குவித்தார். ஆயினும் கல்யாணி சிரிக்கவில்லை. அவள் எப்பொழுதும் போலவே இருந்து வந்தாள்.

நாளாக ஆக பஞ்சநதம் பிள்ளையின் மனசு உடைய ஆரம்பித்தது. அதன் பலனாய் அவர் படுத்த படுக்கையானார். கல்யாணி இரவு பகல் பாராமல் அவருக்கு சிசுருஷை செய்தாள். பிள்ளைக்கு நோய் முற்றிக் கொண்டு வந்தது. கடைசியாக ஒரு நாள் பஞ்சநதம் பிள்ளை படுக்கையில் எழுந்து உட்கார்ந்தார். கல்யாணியின் கையை எடுத்துத் தம்முடைய கையில் வைத்துக் கொண்டார்.

''கல்யாணி! முக்கியமான விஷயத்தை இப்பொழுது சொல்கிறேன், கேள். நான் உனக்கு விடுதலை அளிக்கிறேன்; இந்தக் கல்யாண பந்தத்திலிருந்து, கடவுள் சாட்சியாக உன்னை விடுதலை செய்கிறேன். வருங்காலத்தில் உன் மனத்துக்குப் பிடித்த வாலிபன் யாரையேனும் நீ கல்யாணம் செய்து கொண்டால் என்னுடைய ஆத்மாவுக்கு அதனால் அதிருப்தி ஏற்படாது; திருப்திதான் உண்டாகும்'' என்றார்.

இத்தனை நாட்களுக்குப் பிறகு இப்போதுதான் கல்யாணியின் கண்களில் ஜலம் வந்தது. அவளுடைய உள்ளத்தில் அப்போது ஓர் ஆசை, ஒரு வேகம் உண்டாயிற்று. எழுந்திருந்து பஞ்சநதம் பிள்ளையைக் கட்டிக் கொள்ள வேண்டுமென்று நினைத்தாள். கட்டிக் கொண்டு அவரை ''மாமா!'' வென்று கூப்பிட்டுத் தன்னுடைய இருதயத்தின் கதவைத் திறந்து அதில் உள்ள இரகசியத்தை அவருக்குத் தெரியப்படுத்த வேண்டுமென்று எண்ணினாள். ஆனால் அத்தகைய எண்ணத்துடனே எழுந்து நின்றதும், அவளுடைய இருதயம் மறுபடி வைரமாகி விட்டது. அந்த இரகசியம் தனக்கு மட்டும் உரியதல்லவென்றும் முத்தையனுக்கும் அதில் உரிமை உண்டென்றும், தங்கள் இருவரையும் பகவானையும் தவிர வேறு யாருக்கும் அது தெரியக் கூடாதென்றும் ஒரு கணத்தில் அவள் உறுதி கொண்டாள்.



கல்யாணத் தரகர்: பெண் பார்க்க உன் தாத்தாவும் சித்தியும் மட்டும்தான் வரப்போறாங்களேயே உங் அப்பா அவசர வேலையா வெளியூர் போயிட்டாரா?

பையன்: தரகரே! போன முறை அப்பாவோட நான் போய்ப் பார்த்த பெண்தாக் இப்ப என் சித்தி ஆயிட்டாங்கறது ஞாபகம் இருந்தா இந்தக் கேள்வி கேட்க மாட்டீங்க!

—கே. ஆர். எம்.

ஆகவே, எழுந்து நின்றவள், கை கூப்பிய வண்ணம் அவரைச் சுற்றி வந்து தன்னுடைய தலை அவருடைய பாதங்களில் படும்படியாக வணங்கி நமஸ்கரித்தாள். அவருடைய பாதங்கள் அவளுடைய கண்ணீரால் நனைந்தன.

இது நடந்து ஐந்தாறு நாட்களுக்கெல்லாம் பஞ்சநதம் பிள்ளை காலமானார். கல்யாணி உலகத்தாரின் முன்னிலையில் கைம்பெண் ஆனாள்!

(தொடரும்)

# கவிதைக் கொத்து



## வாக்குச் சீட்டு

ஐந்து ஆண்டுகளுக்கு
ஒரு தடவை
எங்களுக்காக
அளிக்கப்படுகிற
பால் சோற்றை
வாக்குறுதி எனும்
நிலவைக் காட்டி
செவிலித்தாயே
சாப்பிட்டுவிடுகிறுள்!

-பாவேகோ

## காலை வரும் மாலை வராது!

காலை வரும்
மாலை வரும்
காலம் கடக்க
கலியுகம் உருளும்
காளை வரும்
மாலை வரும்—என
காத்திருக்கும்
கன்னியர்க்கோ....
காலை வரும்
கவலை வரும்
மாலை வராது.
ஆம்!
மணமாலை வராது!

-மீரா கருணகரன்





## இப்போதுமட்டும் ஏன்?

தொட்டிலிலே கிடந்தபோது
பாலுக்கு அழுதேன்;
பால் தந்தீர்கள்.
தரையிலே தவழ்ந்தபோது
பொம்மைக்கு அழுதேன்;
பொம்மை தந்தீர்கள்.
பள்ளியிலே சேர்த்தபோது
புத்தகத்துக்கு அழுதேன்;
புத்தகம் தந்தீர்கள்.
சின்னஞ் சிறுவினிலே
கொலுசுக்கு வளையலுக்கு அழுதேன்
வாங்கித் தந்தீர்கள்.
தோழியரோடு ஆடியபோது
பாவாடை தாவணிக்கு அழுதேன்;
தந்து மகிழ்ந்தீர்கள்.
கலைகளை ரசித்தபோது
வீணைக்கு அழுதேன்
மீட்டச் சொன்னீர்கள்.
ஈரெட்டு வயதுவரை
எது எதெற்கோ அழுதேன்;
எல்லாம் தந்தீர்கள்.
காதலித்து நின்றபோது
காதலனுக்கு அழுதேன்
சாபம் ஏன் தருகிறீர்கள்?
தடை ஏன் போடுகிறீர்கள்?

-எஸ். அறிவுமணி



## விலைவாசியின் வேண்டுகோள்!

'இன்சாட்' ஒன்றென்ன
ஒன்பதுகூட விடுங்கள்.
ஆனல்—
விடும்போதெல்லாம்
அவை என்னுடன்
பறப்பதாய் மட்டும்
கார்ட்டூன் போட
வேண்டவே வேண்டாம்.
காரணம்—
என்னவானலும் நான்
கீழே விழவேமாட்டேன்.
ஆனல்?

-எஸ். சந்திரமௌலி

## இன்றைய ஏகலைவன்

காப்பிய நாயகர்கட்கு
சமமாக ஏற்காத
துரோணரை ஆசானய்
ஏற்று
தன் கட்டைவிரலையே
காணிக்கையாக்கினன்
அந்த ஏகலைவன்.
காப்பி அடிக்கவிடாத
ஆசான்களின்
கட்டையையே சாய்க்கிறார்கள்
இன்றைய ஏகலைவர்கள்!

-எஸ். சித்ரா





## காதலிக்கு...

உன்னை
அமுதே, ஆருயிர் நிலவே
என்றெல்லாம் வர்ணிக்க
அந்தக்காலப் புலவனில்லை
நான்.
பாமாலின் எண்ணெயே!
பாமரர்க்குக்
கிடைக்காத சர்க்கரையே!
கர்நாடகக் காவிரியே!
என்றுதான்
வர்ணிக்க முடிகிறது.

-வல்லூர் இளங்கோவன்



## விதிவிலக்கு

'வீட்டுக்கொரு மரம்
வளர்ப்போம்'
இது அரசின் ஆணை.
எங்களின்
வீடே:
மரத்தடியாக
இருக்கும்போது
நாங்கள்
ஏன் மரம் வளர்க்கவேண்டும்?
இலைகளே
இல்லாத
இந்த ஜனநாயக அரசா
எங்களுக்கு
நிழலைத் தரப்போகிறது!

-இரா. பாண்டியன்



மனத்தைச் சுற்றிப் பிணைத்திருந்த இரும்புச் சங்கிலியொன்று கட்டவிழ்ந்து விழுந்த மாதிரி சுகமாயிருந்தது கன்னியப்பனுக்கு.

அப்பா! எத்தனை நாள் அரட்டலும்மிரட்டலும், கெஞ்சலும் கொஞ்சலும் இன்று பலனளித்து விட்டிருக்கிறது!

இந்த நோஞ்சான் கமலாவுக்குத்தான் எத்தனை நெஞ்சழுத்தம்! எவ்வளவு உறுதியாய், பிடிவாதமா யிருந்தாள்!

''தோ பாரு! நல்ல படியா நீ ஒத்துக்கிட்டியிரு. நீயும் புள்ளைகளும் சௌகரியமா இருக்கலாம்... நீ பிடிவாதம் பிடிச்சியின்னா, வேலையை விட்டுட்டு மாலாவோட வடக்கே எங்கினாச்சும் கண் காணாமப் போயிடுவேன்... ஆமா சொல்லிப்புட்டேன்... இனிமே என்னால பொறுத்துக்கிட முடியாது...'' என்று அவள் பிடரியைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டு வெளியே செல்லத் திரும்பினான் கன்னியப்பன். குழந்தைகள் மூன்றும் தாயாரின் புடவைத் தலைப்பைப் பிடித்துக் கொண்டு அழுதன.

அழுது வீங்கின கண்களைத் துடைத்துக் கொண்டே சொன்னாள் கமலா. விம்மலின் வெடிப்புக்களிடையே வார்த்தைகள் துடித்து விழுந்தன.

''எங்களை விட்டுட்டுப் போயிடாதே மச்சான்! மாலாவோ, பாலாவோ எவளை வேணும்னாலும் கட்டிக்க. எங்களை அறுதியா விட்டுட்டுப் போயிடாதே, மச்சான்! சோத்துக்கு எங்க போயி நிப்பேன் நானு?...''

''இது பொறுப்பான பேச்சு. அண்ணைக்கே இத்தைச் சொல்லியிருந்தா இத்தினி நாளு இவ்ளோ ஒதை தின்னிருப்பியா?... சரி போ அழுவாதே... இந்தா பத்து ரூவா... புள்ளைகளுக்கு அல்வா வாங்கித் தா....''

உற்சாகமே மூச்சாய் இழைய வெளியே ஓடினான் கன்னியப்பன். சாலையில் பார்க்கிற எல்லாமே அழகாய்த் தெரிந்தன. 'மனோகர் நர்ஸிங்ஹோம்'மில் டெலிபோன் ஆபரேட்டராகப் பணி புரிந்து வரும் தன் நண்பன் முத்துலிங்கத்தைப் பார்த்துச் சொல்ல வேண்டும் போல இருந்தது.

# ஞானபூமி

ஜெயரதன்

மாலாவுக்கும் அவனுக்கும் உள்ள உறவை அறிந்தவன் முத்துலிங்கம். அவளைக் கல்யாணம் செய்துகொள்ளக் கமலா சம்மதிக்காததை யெல்லாம் அறிந்தவன். 'கழுதைய ரெண்டு சாத்துச் சாத்தினா ஒத்துக்கிட்டுப் போகுது.' என்று யோசனை சொல்லிக் கொடுத்தவன். கமலா சம்மதம் கொடுத்ததை அறிந்தால் எவ்வளவு சந்தோஷப்படுவான்?

அவசரம் அவசரமாய் முத்துலிங்கத்தைப் பார்க்கப் போனான் கன்னியப்பன்.

முத்துலிங்கத்தை அவன் இடத்தில் காணவில்லை. ஜவஹர் தான் இருந்தான்.

''என்னஜவஹர்!...முத்துலிங்கம் லீவா?''

ஜவஹர் ஆச்சரியத்துடன் பார்த்தான்.

''ஒங்களுக்கு விஷயம் தெரியாதா? அவருக்கு நேத்துக் காலைல ஹார்ட் அட்டாக்!... சுருசுருப்பாத்தான் வந்தாரு. பத்து நிமிஷம் வேலை பார்த்தாரு. சட்டுன்னு மார்வலின்னாரு. சுருண்டு விளுந்துட்டாரு. மேலே எட்டாம் நம்பர் ரூம்லே இருக்காரு...''

மாடிக்கு ஓடினான் கன்னியப்பன்.

முத்துலிங்கத்துக்கா ஹார்ட் அட்டாக்! வாட்ட சாட்டமாய், பயில்வான் மாதிரி உடம்பு. பத்து மைல் சளைக்காமல் ஓடுவாரே! மூணு பேர் சாப்பிடுவதை ஒரே ஆள் சாப்பிட்டுவிட்டு, 'சாப்பாடு சுகமில்லே. வீட்டுலே போய் ஒரு வெட்டு வெட்டணும்' பாரே! யாருக்கு என்ன வர்றதுன்னே கணக்கில்லே போலிருக்குதே!...

அரக்கப் பறக்க எட்டாம் அறைக்குள் நுழைந்தான்.

மூக்கு வழியாய் ஒரு குழாய் உள்ளே போயிற்று. இடது கையில் ஊசியைக் குத்தி அதன் வழியாய் ஏதோ சொட்டுச் சொட்டாய்த்தலைமேல்ப்பாட்டிலிலிருந்துஇறங்கியது. அழக்கூடத் திராணி இல்லாமல் மனைவி குழந்தைகள் கண்கள் சோர்ந்து வெளியில் உட்கார்ந்திருந்தன. ஒற்றை விரலை வாயில் குறுக்காக வைத்து எச்சரித்துவிட்டுப் போனாள் ஒரு நர்ஸ்.

பார்க்கிற பெண்களையெல்லாம் துச்சமாய் எடுத்தெறிந்து.'இவளுக்கு இது விலை, அவளுக்கு அது விலை' என்று அட்டகாசமாய்க் கணித்த முத்துலிங்கமா இது? இப்படிக் கட்டையாய்க் கிடப்பது?

தன் உடலில் பாதிப் பலம் போனது மாதிரி இருந்தது கன்னியப்பனுக்கு. தளர்ந்து போய் ஜவகரிடம் வந்தான். 'நம்ப முடியல்லியே, நம்ப முடியல்லியே' என்று புலம்பினான்.

''அழிச்சா அஞ்சாள் பண்ணலாம். அவரு கட்டை மாதிரி கெடக்கிறாரே?... எப்பச் சரியாகும்?''

டெலிபோனைக் கையால் பொத்திக் கொண்டே பதில் சொன்னான் ஜவஹர். ''ரெண்டு மூணு மாசம் ஆவும். அதுக்குப் பொறவும் கூட ஜாக்கிரதையாத்தான் இருக்கணும்... இனிமே அரை ஆள்தான்...''

நாடி தளர்ந்து நாற்காலியில் அமர்ந்து கொண்டான் கன்னியப்பன்.

சுற்றிக் காணப்படுகிற எல்லாமே தற்காலிகமாய்த் தோன்றின.

அப்போது ஒரு சக்கர நாற்காலி அவனைக் கடந்து போயிற்று.

அதில் உட்கார்ந்திருந்த பெண்ணின் முகம் மிகவும் பரிச்சயமாய் இருந்தது. ஒரு நிமிடம் நினைவைக் கசக்கி விட்டுக் கொண்டான். ஆ! அடிக்கடி இந்த நர்ஸிங் ஹோமில் யாரையாவது வைத்தியத்திற்கு அழைத்து வருகிற பெண்ணல்லவா?

'குதிரை வருது' என்று சங்கேதமாய் முத்துலிங்கம் சொல்வதும் இவன் விருட்டென்று திரும்பி அவளைப் பார்த்து ரசிப்பதுமாக எத்தனையோ நாட்கள் சென்றிருக்கின்றன.

மதமதவென்று உடலும், மனத்தைப் பொசுக்குகிற மேடு பள்ளங்களுமாய்ப் பல நாட்கள் அவளை நினைத்துத் தூக்கம் வராது புரண்டு புரண்டு படுக்கையைக் கலைத்திருக்கிறான்.

அவளுக்கு என்ன? கழுத்து வரை வெள்ளைத் துணியைப் போர்த்தி...என்ன ஆயிற்று அவளுக்கு?

ஜவஹரை அணுகினான்.

''ப்ரெஸ்ட் கான்ஸர் கேஸ்... எல்லாம் சடன்னு டயக்னைஸ் பண்ணி... சடன்னு ஆபரேஷன்.... ரெண்டும் எடுத்தாச்சு... நல்லவேளை சரியான டயத்துலே வந்துடுச்சு அந்த அம்மா. இல்லேன்னா உசுருக்கே ஆபத்து....''

''பார்க்க நல்லாத்தானே இருந்தாங்க?''

கன்னியப்பன் மிடறு விழுங்கினான்...

''நல்லான்னுநாமநெனச்சுக்கிட்றதுதான். ஆளைப்பார்த்துமயங்காதே ஊதுகாமாலேன்னு தெரியாமயாப் பெரியவங்க சொன்னாங்க?.. பாத்தா ஹீரோ மாதிரி இருக்காங்க.கார்லே வந்து எறங்குறாங்க. எக்ஸ்ரே எடுத்துப் பாத்தா எல்லாம் தகராறு... இந்த ரோக ஒடம்பை வச்சுக்கிட்டுத்தான் நாம இந்த ஆட்டம் ஆடறோம்....''

பளீரென்று மார்பில் அறைந்தது மாதிரி இருந்தது கன்னியப்பனுக்கு.

உதட்டைச் சுழித்து மாலா அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

அழகு அழகு என்று மாலாவைச் சுத்திச் சுத்தி வருகிறோமே?.... அவள் உடம்பில் இப்படி ஒரு...

நினைவே தாங்க முடியாதவனாய்த் தலையை இப்படியும் அப்படியுமாய்க் குலுக்கிக்கொண்டான்.

கமலா ஒல்லிதான். முகத்தில் அம்மை வடுக்கள்தாம். ஆனாலும் கல்யாணம் ஆகி ஏழெட்டு வருடங்களில் ஒரு நாள் கூடத் தலைவலி, கால்வலி என்று படுத்ததில்லை. துறுதுறுவென்று காரியங்கள் செய்வாள். கூப்பிட்ட குரலுக்கு ஓடிவந்து, உட்கார் என்றால் உட்கார்ந்து, நில்லென்றால் நின்று...

மனத்தில் ஓர் இனம் தெரியாத மூலையில் ஏதோ கசிகிற மாதிரி இருந்தது.

மீண்டும் நாற்காலியில் போய் அமர்ந்து கொண்டான்.

கடந்த ஒரு மாதமாய் அவனுக்கும் கமலாவுக்கும் ஏரே சண்டை. தனக்கு மிகவும் பிடித்த மாலாவை மறுமணம் செய்து கொள்ளத் துடித்தான் கன்னியப்பன். கமலா ஒப்புக்கொள்ளவில்லை. தினசரி அடி உதை. கையில் அகப்பட்டதை எடுத்து வினாசித் தள்ளியிருக்கிறான். எதற்கும் அசையாத கமலா இன்றைக்குச் சம்மதித்தாள். இந்த ஒரு மாதத்தில் அவன் வாங்கின அடி இந்த ஜன்மத்திற்குப் போதும்.

''அண்ணே இதைச் சொல்றீங்களே!... அந்த ஸ்ட்ரெச்சர்லே எடுத்துக்கிட்டு வர் ராங்களே அந்தாளைப் பாருங்க....''

முகம் தவிர வெள்ளைத் துணியால் மற்ற இடங்களை மூடியிருந்தார்கள். தூக்கி வாரிப் போடுகிற மாதிரி தலையில் ஒரு கட்டு.

அலுங்காமல் குலுங்காமல் கொண்டு போனார்கள். அதைத் தொடர்ந்து ஒரு அம்மாள் போனாள். மனத்தின் நடுக்கம் நடையிலேயே தெரிந்தது.

''பெரிய ஆளு அவரு. நல்ல காசு. திடும்னு தலையிலே கொடைச்சல்னு வந்தாரு. எக்ஸ்ரே எடுத்தா ப்ரெய்ன்லே ட்யூமர்....''

''அப்பிடின்னா?''

''கட்டி. ஆபரேட் பண்ணி வார்டுக்குக் கொண்டு போறாங்க. தேர்றது சந்தேகம்னு பெரிய டாக்டர் சொன்னாரு. வேற வழியில்லாம ஆபரேட் பண்ணினாங்க. தலையிலே தோலை நறுக்கி, எலும்பை வெட்டி, பெட்டி மாதிரி தெறந்து, உள்ளே மூளைக்குள்ளே ஆப்பரேஷன். தியேட்டர்க்குள்ளே கொண்டு போறபோது அவர் சம்சாரம் அழுத அழுகை இருக்கே... அடே அப்பா! என்னாலேயே தாங்க முடியல்லேன்னு பார்த்துக்கிடுங்க...''

நிற்கக்கூட முடியாமல் கால்கள் துவண்டன கன்னியப்பனுக்கு. அடிவயிற்றில் ஒரு பயம் சுருண்டு எழுந்தது.

தனக்கும் இப்படி ஏதாவது வந்துவிடுமோ? பெரிய நோயுடன் படுத்துக் கொண்டால் மாலா லட்சியம் செய்வாளோ? வாட்ட சாட்டமான தன் உடம்பை நேசிக்கிற அவள், ஏதேனும் ரோகம் வந்தால் ஏற்றுக் கொள்வாளோ? 'போய்யா நீயும் உன் வியாதியும்' என்று உதறிவிட்டுப் போய்விடுவாளோ? சொல்ல முடியாது. ஆனால் ஒன்று நிச்சயம். என்ன ஆனாலும் கமலா என்னை விடமாட்டாள்.வியாதிக்காரனாய்க் கட்டிலில் கிடந்தாலும் கண்ணின் மணியாய் என்னைக் காப்பாள். நிச்சயம் இது.

மனத்துக்குள் சடசடவென்று விதவிதமாய் ஜன்னல்களின் கதவை யாரோ திறந்தார்கள். வெளிச்சமும் காற்றும் இமிறிக் கொண்டு உள்ளே புகுந்தன.

யாரோ இருமிக் கொண்டு வந்தார்கள். ஸ்டெச்சரில் யாரோ போனார்கள். நடக்க முடியாமல் கம்பை ஊன்றிக் கொண்டு யாரோ நடந்து வந்தார்கள். மிடுக்காய் நடந்து போகிறவர்களைப் பார்த்தபோது, கண்ணுக்குத் தெரியாமல் ஏதோ நோயின் நிழல் அவர்களைத்தொடர்வது போலிருந்தது.

'எதையும் நிரந்தரமாய் நினைத்து அலையாதீர்கள். இந்த மிடுக்கும் துள்ளலும் எப்போது வேண்டுமானாலும் ஒய்ந்துபோய் விடும். ஜாக்கிரதை' என்று கூவ வேண்டும் போல் இருந்தது.

அழகாய்ச் சிரித்த மாலா, சட்டென்று நோய்வாய்ப்பட்டு விழுந்த மாதிரி இருந்தது. கமலாவும் குழந்தைகளும் மனத்தை ஆக்ரமித்தார்கள்.

ஆரோக்கியமாய் இருந்தது.

### "28க்கு 28"

**சராசரியாக ஒரு பெண்ணின் இடையின் நீளம் 28 அங்குலம். சராசரியாக ஒரு ஆணின் கையின் நீளம் 28 அங்குலம் இயற்கைதான் எவ்வளவு பொருத்தமாய் அமைத்திருக்கிறது!**

**- சத்தி கமலேஸ்வரன்**



தனித்தன்மை வாய்ந்த
இவரது தணியாத விருப்பம்
'ப்ளெயின்' ஷர்ட்டிங் மட்டும் அணிவதே

அதாவது மஃபத்லால் வழங்கும்
பாலியெஸ்டர் மற்றும் பாலியெஸ்டர்
ப்ளெண்டுகளின் ஷர்ட்டிங்.

அவருக்கென ஒரு தனி பாணி, தனி ரசனை.
பறைசாற்றமாட்டார், என்றும் பவ்வியமாக இருப்பார்.
தனக்கே உரிய தனித் தோற்றத்தை வலியுறுத்துவார்.

மஃபத்லால்
ஷர்ட்டிங்



MF-124-TAM

# பாலகுமாரனு, பரவசமடைகிறோம்!

● ''ஏழைமை ஒழிவது எப்போது'' உரையாடல் நன்றாகவே அமைந்திருக்கிறது. நல்ல முயற்சி. பாராட்டுதல்கள்.

எனது கருத்துக்களை டேப்பில் பதிவுசெய்து பின்னர் எழுதி வெளியிட்டிருப்பதில் புள்ளி விவரத்தைப் பொறுத்தவரை சில தவறுகள் காணப்படுகின்றன.

1. வேலை செய்யும் வயதுள்ள சுமார் 35 கோடி பேரில் 5 கோடி பேர்தான் Organised Sector இல் அமர்த்தப் பட்டிருக்கிறார்கள். மீதமுள்ள 30 கோடிக்குப் பக்கமானவர்கள் UnOrganised Sector இல் இருப்பவர்கள். இவர்களது உற்பத்தித் திறனை அதிகப் படுத்தும் வாய்ப்புகளை உருவாக்க வேண்டும் என்று குறிப்பிட்டேன். 30 கோடி பேர் வேலையில்லாது இருக்கிறார்கள் என்று இதழில் குறிப்பிட்டிருப்பது பொருத்தமாக இல்லை.

2. நமது பட்டதாரிகளில் 100க்கு 16 பேர் விவசாயப் படிப்பு படித்து வரும் பட்டதாரிகள் என்பது தவறு. அது 1000க்கு 16 பேர் என இருக்க வேண்டும்.

சென்னை-25 வா. செ. குழந்தைசாமி

● எதிர்காலச் செல்வங்களின் இன்றைய கதியை அட்டைப் படத்தில் வெளியிட்ட உமக்கு நன்றி. ஏழைமை ஒழிவது எப்போது? கலந்துரையாடல் ஏ-ஒன்.

நாகை ஆர். சற்குணன்

● ராஜாஜியின் நினைவுகளில் எங்களை நனைய அழவைத்து நனைந்தோர்கள் மூழ்கிவிடாமல் கலந்துரையாடலையும் வைத்து எங்களைத் திணற அடித்துத் திக்குமுக்காட வைத்துவிட்டீர்கள்!

சென்னை-17 கே. சங்கர்

● குதிரை இரும்பானாலும் பாலகுமாரனின் உறுதியான கடிவாளம் அதையும் அடக்கிவிடும் என்று நம்புகிறோம். பொன் குடத்துக்குப் பொட்டிட்டாற்போல் அதற்கு ம. செ. ஓவியம் வேறு. அப்புறம் என்ன. அட்டகாசம்தான்!

திருச்சி-14 சி. உஷா

● உப்பு இல்லாத சாம்பார் எப்படி ருசிக்காதோ அதுபோல் இருந்தது தராசு அவர்களின் கேள்வி-பதில் இல்லாத கல்கி.

சென்னை-5 வி. வி. ராமன்

● அனுஷாவின் 'இரக்கம்' போட்டிக் கதையைப் படித்ததும் 'இரக்கத்திற்குப் பெயர் போனவர்கள் பெண்கள்' என்ற கருத்து தவறானது என்ற முடிவுக்கே என்னால் வர முடிந்தது.

நெய்வேலி-3 ப. உத்தண்டராமன்

● கர்நாடக ராகங்களின் நிறங்கள் பற்றி சக வயலின் வித்வான் ஸ்ரீ வி. வி. சுப்ரமணியம் அவர்களின் கருத்தைப் பார்த்ததும், நாங்கள் மிகவும் ஆச்சரியம் அடைந்தோம். ஏனெனில் பல வருஷங்களாக எங்களுக்கு இதுபோன்ற ஓர் உணர்வு இருந்து வருகிறது. இருப்பினும் இதை வெளியே சொன்னால் கேட்பவர்கள் இக்கருத்தை எப்படி எடுத்துக் கொள்வார்களோ என்ற அச்சத்தால் எங்கள் எண்ணத்தை வெளியிடாமல் இருந்தோம்.

சென்னை-28 சிக்கில் வி. குஞ்சுமணி
என். நீலா

Regarding Balakumaran's New Novel :-
HAPPY, BLISSFUL, MERRY, PLEASED, JOYOUS, REJOICED, GRATIFIED, CONTENT, SATISFIED, BUOYANT,



✕ பாலகுமாரன்

DELIGHTED, ELATED, EXULTANT, EXHILARATED, OVERJOYED
ANY MORE SYNONYMS?

கும்பகோணம் உஷா மணியன்

● 'பாரதி புகழ் வளர்த்த கல்கி' என்ற கட்டுரை தொடர்பாக:

அ. சீனிவாசராகவன், திரிலோக சீதாராம், நான், வல்லிக்கண்ணன் போன்ற சிலர் சேர்ந்து 1948ல் பாரதி பாடல்களைப் பொதுவுடைமை யாக்க, 'பாரதி விடுதலைக் கழகம்' என்றொரு அமைப்பை ஏற்படுத்திக் கிளர்ச்சி செய்ததன் விளைவாகவே, அச்சமயம் பிரதமராக இருந்த ஓமாந்தூர் ரெட்டியார் பாரதி பாடல்களைத் தேச உடைமையாக்க நடவடிக்கை எடுத்துக்கொண்டார். நண்பர் டி. கே. ஷண்முகம் எங்களுடன் சேர்ந்துகொண்டு பல வகையிலும் துணை புரிந்தார். பாரதி பாடல்கள் தேசவுடைமை ஆவதில் தமக்கு ஒன்றும் ஆட்சேபமில்லை என்று அரசிடம் தெரிவித்துவிடுமாறு கேட்டுக் கொண்டார் மெய்யப்ப செட்டியார். இவ்விதம் அவர் மனமுவந்து உரிமையைத் தந்ததற்காகவும், எங்கள் நன்முயற்சிக்கு மதிப்பளித்து நடவடிக்கை எடுத்துக்கொண்ட முதல்வர் ஓமாந்தூராரைப் பாராட்டுவதற்காகவும் பாரதி விடுதலைக் கழகத்தின் தலைவன் என்ற முறையில் நானும் சீதாராமும் சேர்ந்து உட்லண்ட்ஸ் ஓட்டலில் பாராட்டுக் கூட்டம் ஒன்றை நடத்தினோம். அக்கூட்டத்துக்குக் கல்கி அவர்களைத் தலைவராக இருக்கச் செய்தோம்.

சென்னை-94 நாரண துரைக்கண்ணன்

## 4

சிவகுரு கனிவாகக் கேட்டார்: ''ஏன் ராஜம்? உன் மனசுல நீ வேற யாரையாவது நினைச்சு வச்சிருக்கியா? உங்கப்பா உங்க சொந்தத்துலேயே யாரோ பசங்க இருக்காங் கன்னு சொன்னாரே. அவங்கள்ல யாரையாவது நீ கல்யாணம் பண்ணிக்கணும்னு ஆசை வெச்சிருக்கியா?''

''அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லிங்க''

''பின்னே என்ன தயக்கம்? நான் கிழவன் இல்லே ராஜம். எனக்கு நாப்பத்திரண்டு வயசுதான் ஆகுது. என் உடம்பு நல்ல ஆரோக்கியமாக இருக்குது. இந்தச் சொத்தெல்லாம் நான் சொந்தமாச் சம்பாதிச்சது. என் இஷ்டத்துக்கு யாருக்கு வேணாலும் குடுக்கலாம். உமாவுக்கு ஏதோ கொஞ்சம் குடுத்துட்டுப் பாக்கி பூராவும் உனக்கும், நமக்குப் பிறக்கப் போற பிள்ளைகளுக்கும் தான். எவ்வளவு லட்சம் தேறும் தெரியுமா என் சொத்துக்கள் எல்லாமாச் சேர்ந்து?''

''இந்தப் பேச்சு நீங்க மறுபடியும் பேசறதானா நான் காலையிலேர்ந்து இங்கே வேலைக்கு வரல்லிங்க.''

''அப்படி மாத்திரம் செஞ்சுடாதே ராஜம். உனக்கு இஷ்டமில்லாட்டி வேண்டாம். விட்டுடு. இன்னியோட இந்தப் பேச்சு சரி. நாளையிலேர்ந்து இந்தப் பேச்சை எடுக்க மாட்டேன். சரிதானே?''

''சரிங்க. நீங்க சாப்பிடுங்க.''

சிவகுரு சாப்பிடத் தொடங்கினார். அவருக்குப் பெருத்த ஏமாற்றம். அவர் நகர்த்திய முதல் காயை ராஜம் பட்டென்று வெட்டி வீழ்த்தி விட்டாள். தன் மனைவியாகும் ஆசையைக் காட்டினால் தன் செல்வத்தைக் கண்டு அவள் மயங்கித் தன்னை நம்பிவிடுவாள் என்றும், பிறகு சுலபமாக அவளைத் தன் இச்சைக்கு இசையச் செய்து விடலாம் என்றும் அவர் போட்டிருந்த கணக்கு தப்புக் கணக்காகி விட்டது.

ஆனால் தன் தோல்வியையோ ஏமாற்றத்தையோ வெளிக் காட்டாமல் மறைத்துக் கொண்டு ராஜத்துடன் சகஜமாக மறுபடியும் பேச்சுக் கொடுத்தார்.

''என் மேல் கோபம் ஒண்ணும் இல்லியே ராஜம்?''

''ஐயோ அப்படியெல்லாம் ஒண்ணும் இல்லே ஐயா.''

''பரவாயில்லே ராஜம். நீ என்னை மாமான்னே கூப்பிடலாம்'' என்றார் முறுவலித்தபடி.

''சரி மாமா'' என்றாள் ராஜம்.

ராஜத்தால் அன்றிரவு தூக்குடைபட்ட பிறகு சிவகுரு ஒன்றுமே நடக்காதது போல சகஜமாக அவளுடன் பழகத் தொடங்கியிருந்தார். ஆனால் மறுபடியும் மறந்தும் கூட அவளுடன் அன்று இரவு பேசியதைப் போலப் பேசாமல் பார்த்துக் கொண்டார்.



ராஜமும் தான் அவரை அவமானப்படுத்தி விட்டோமோ, அப்பா வந்த பிறகு தன்னை இது பற்றிக் கோபிப்பாரோ என்று பயப் பட்டு, அதற்கு ஈடு செய்யும் வகையில் அவரிடம் சகஜமாக, தனக்கு அவரிடம் கோபம் ஒன்றும் இல்லை என்பது போலப் பழகினள். ஆனல் ஜாக்கிரதையாக மட்டும் இருக்க வேண்டும் என்பதில் கவனமாக இருந்தாள்.

ஒரு நாள் இரவுச் சாப்பாட்டின் போது சிவகுரு ராஜத்திடம் பேச்சுக்கொடுத் தார்.

''ராஜம், உங்கப்பாவும் உமாவும் விஜ யாவைக் கூண்டிண்டு வரப்போறதா இன் னிக்கு எனக்கு ஆபீசுக்குப் போன் வந்தது.''

ராஜத்தின் முகம் அதைக் கேட்டு மலர்ந் தது.

''என்னிக்கு வர்ராங்களாம்?''

''அது இன்னும் நிச்சயமாத் தெரியலே. ஒரு வாரத்துக்குள்ள வந்துடுவாங்க.''

''இதைக் கேக்கறதுக்கு எனக்கு ரொம்ப சந்தோஷமா இருக்கு. நாளைக்கே அவங்க வந்துடக் கூடாதான்னு எனக்கு இருக்கு.'' என்று குதூகலமாகச் சொன்னள் ராஜம்.

நெல்லிக்குப்பத்தில் ஹோட்டல் வைத்திருக்கும் நண்பர் ஒரு பிரபல தலைமுறை விற்பனைக் கடையிலிருந்து சுவர்க் கடிகாரம் வாங்கி வந்தார்; சில நாட்களுக்குள் அது ரிப்பேராகி விட்டது. கேரண்டியுடன் வாங்கின கடிகாரமாதலால் சரி செய்துகொண்டு வந்தார். மறுபடியும் ரிப்பேராகி விட் டது. ''அடிக்கடி ரிப்பேராகிக் கொண் டிருக்கிறது. வேறு மாற்றிக் கொடுங்கள்!'' என்று கேட்டார். கடைக்காரர் சம்மதிக்காமல், ''வேண்டுமானல் மறுபடியும் ரிப்பேர் பார்த்துத் தருகிறோம்'' என்று சொல்லி விட்டார். அப்படியே திருப்பிக் கொண்டு வந்து ஹோட்டலில் எல் லோர் பார்வையிலும் படும்படியாக மாட்டி அதன் மேல் 'இது குறிப்பிட்ட கடையில் வாங்கியது'—என்று பெரிய தாக போர்டு எழுதி வைத்துவிட்டார்.

அடுத்த சில நாட்களில் புதுக் கடி காரம் அவரைத் தேடி வந்தது!

— ரா. ஜோதிராமன்



''உனக்கு அவ்வளவுசந்தோஷமா இருக்கு. எனக்கு ஏண்டாப்பா இவ்வளவு சீக்கிரமா வராங்கன்னு இருக்கு'' என்று கூறிச் சிரித் தார்.

அவர் முகத்தில் அசடு வழிவதைக் கண்ட ராஜத்திற்கு 'சுரீர்' என்றது. 'இந்த வேதா ளம் மறுபடியும் முருங்கை மரம் ஏறுகிறாற் போல இருக்கிறதே' என்று நினைத்து அவள் முகத்தைச் சுளித்துக் கொண்டாள்.

''எங்க விஜயா வர்றதைப் பத்தி எனக்கு சந்தோஷம்தான். உமாவைப் பத்தி எனக்கு சந்தோஷமும் இல்லே, வருத்தமும் இல்லே. என் வருத்தமெல்லாம் உங்கப்பா திரும்பி வர்றதைப் பத்திதான்'' என்று கூறி நிறுத்தி அவள் முகத்தை ஆராய்ந்தார்.

அவர் என்ன கூற வருகிறார் என்பதை ஊகிக்க முடியாத ராஜம் என்ன சொல்வ தென்று தெரியாமல் குழம்பினள்.

''ஏன்னு கேக்கறியா? அவர் வந்துட்டா இன்னமே உன்னேட அருமையான சாப் பாடு எனக்குக் கிடைக்காமல் போயிடுமே!'' என்று கூறிச் சிரித்தார்.

உண்மையிலேயே அவர் அதற்காகத்தான் வருந்துகிறாரா என்பதில் நம்பிக்கை ஏற் படாத ராஜம், மரியாதைக்காக ''அதனு லென்ன மாமா, அப்பா வந்ததுக்கப்புறமும் கூட நான் வேணுமானலும் முடிஞ்சப்பல் லாம் வந்து சமைக்கிறேனே'' என்றாள்.

''தாங்க்யூ'' என்று கூறிய சிவகுரு ''அன் னிக்கி மாதிரி நீ என்னைத் தப்பா நினைக்காம இருந்தியின்னு நான் உனக்கு ஒரு ப்ரசண்ட் கொடுக்கலாம்னு நினைக்கிறேன்'' என்றார்.

ராஜத்துக்கு அவரிடமிருந்து எதையும் பரி சாக வாங்கிக்கொள்ளப் பிடிக்கவில்லை. முகத்தில் அடித்தாற்போல் வேண்டாம் என்று சொல்லி மீண்டும் அவரை அவ மானப்படுத்தவும் அவளுக்குத் தயக்கமாக இருந்தது.

''ப்ரசண்ட் வாங்கிக்கறதுக்கு இப்ப நான் என்ன செஞ்சுட்டேன்?''

''எனக்கு ஆசையா யிருக்கு, உனக்கு ஏதாச்சும் குடுக்கணும்னு. கொண்டு வந் துட்டேன் பாரேன்'' என்று எழுந்தார்.

''இப்ப என்ன அவசரம்? இப்ப நீங்க சாப்பிடுங்க. எதுவா யிருந்தாலும் அப்பா வந்தப்புறம் வாங்கிக்கிறேனே?'' என்று தட்டிக்கழிக்கப் பார்த்தாள்.

சிவகுரு அவள் சொல்வதைக் காதிலேயே போட்டுக் கொள்ளாமல் தமது அறைக்குச் சென்று ஒரு பொட்டலத்துடன் திரும்பி வந்தார்.

பொட்டலத்தைப் பிரித்து அதிலிருந்து ஒரு பட்டுப் புடவையை எடுத்துக் காண் பித்தார்.

''பார்த்தாயா? நல்ல டார்க் ப்ளூ கலர். உன்னேட நிறத்துக்கு நீ உடுத்திக்கிட்டி யின்னு பளிச்சின்னு கண்ணைப் பறிக்கிற மாதிரி இருக்கும், எடுத்துக்கோ'' என்று புடவையை அட்டைப் பெட்டியில் திருப்பி வைத்து அவளிடம் நீட்டினர்.

''தாங்க்யூ மாமா'' என்று வாங்கிக் கொண்டாள்.

''இப்பத்தாம்மா எனக்கு மனசுக்குத் திருப்தியாயிருக்கு'' என்று கூறிச் சாப்பிட உட்கார்ந்தார்.

'இவருடைய சொத்துக்களுக்கே ஆசை படாத நான் இந்தப் பட்டுப் புடவையை ஆசைப்பட்டு வாங்கிண்டதாக நினைக்கிறாரே என்ன மடத்தனம்' என்று நினைத்துக் கொண்டு ஒரு புழுவை நகர்த்துவது போல அந்தப் பெட்டியைத் தூர நகர்த்தி வைத்து விட்டு அவருக்குப்பரிமாறத் தொடங்கினாள்.

இது நடந்து இரண்டு நாட்களுக்குப்பிறகு,

''ராஜம், சாப்பாட்டை என் பெட் ரூமுக்கே கொண்டு வந்துடறியாம்மா?'' என்று சிவகுரு டைனிங் ஹாலுக்குள் நுழைந்து கேட்டார்.

அவர் சாப்பிட வருவதற்காக டைனிங் ஹாலில் காத்துக் கொண்டிருந்த ராஜம், அவர் குரலைக் கேட்டதும் தான் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை மூடிவைத்து விட்டு எழுந்து நின்று கொண்டாள்.

மீண்டும் அவருடைய படுக்கையறைக் குள் செல்வதற்கு அவளுக்குப் பிடிக்க வில்லை. ஆனால் இவ்வளவு நாட்களை எப் படியோ ஓட்டிய பிறகு இன்னும் சில நாட் களில் இங்கிருந்து 'விடுதலை' கிடைக்கும் நேரத்தில் அவர் மனத்திற்கு வருத்தம் அளிக்கும் வகையில் நடந்து கொள்ளவேண் டாம் என்ற நினைப்பில் ''சரி, கொண்டு வரேன்'' என்றாள்.

சிவகுரு திரும்பிச் சென்றுவிட்டார்.

ஐந்து நிமிடங்களில் சிவகுருவுக்குப் படுக் கையிலேயே சாப்பாடு பரிமாறுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டாள் ராஜம்.

''இன்னிக்கு உமா ஃபோன் பண்ணினா ராஜம். நாளைக்கு ராத்திரி ஜி.டி.ல புறப் படறாங்களாம்.''

''அப்படியா? அப்படின்னா நாளன்னிக் கில்லே அதற்குகடுத்தநாள் காலையில வந்துடு வாங்க?'' என்று மகிழ்ச்சியுடன் கேட்டாள்.

''ஆமா.''

''வேற ஏதாவது சொன்னாங்களா?''

''விஜயாவுக்கு மசக்கை ரொம்ப ஜாஸ்தி யாயிருக்காம், மாப்பிள்ளை எங்கியோ டூர் போக வேண்டியிருக்காம், சாதாரணமா டூர் போறப்போ விஜயாவையும் கூட அழைச் சுண்டு போற வழக்கம். இப்ப வேண்டா னுட்டு இங்கே வரானாம். ஒரு மாசம் இருப்பா.''

''நான் விஜயாவைப் பார்த்து ரொம்ப நாளாச்சு. பார்க்கணும்.''

''உங்கப்பா வந்துட்டாக் கூட நீயும் வந் துண்டிரு. நின்னுடாதே.''

ராஜம் அதற்குப் பதில் ஒன்றும் சொல் லாமல் சிரித்தாள்.

''பரிமாறட்டுமா?''

''ஆகட்டும். என்ன அவசரம்? பசிக்கலே. உங்கூட இன்னிக்குக் கொஞ்சம் பேசலாம்னு நினைக்கிறேன். அவங்கள்ளாம் வந்துட்டா அப்புறம் இவ்வளவு ஃப்ரீயா உன்னோட பேச முடியுமா?''

''அவங்கள்ளாம் வந்தா மாத்திரம் என்ன? விஜயாவோட நீங்க பேசற மாதிரி என்னோட யும் பேசக் கூடாதா என்ன?''



ஒட்டிக் கொண்டிருக்கும் இரட்டை வாழைப் பழங்களைத் தின்பவர்களுக்கு இரட்டைக் குழந்தைகள் பிறக்கும் என்பது பெரியார் மாவட்டத்தில் நிலவி வரும் நம்பிக்கை. வாலிப வயதி னர் இப்படிப்பட்ட பழங்களைச் சாப் பிட முற்படும்போது பெரியவர்கள், ''இரட்டைப் பழத்தைச் சாப் பிடாதே! உனக்குக் கல்யாணமானும் இரட்டைக் குழந்தை பிறக்கும்'' என் பர். 'ஆஹா! இரட்டைக் குழந்தைகள் பிறந்தால் ஒரு பிரசவச் செலவு மிச்ச மாகுமே!' என்று வாலிப வயதினர் வேடிக்கையாகப் பதில் கூறுவர்.

-எஸ். அன்புமணி

ராஜம் வேண்டுமென்றே இப்படிக் கேட் டாள். சிவகுருவுக்கு முகத்திலடித்தாற் போல இருந்தது.

''அப்படியாகுமா? விஜயா விஜயாதான். நீ நீதான்'' என்று கூறியபடியே எழுந்து சென்று அறையின் கதவைச் சாத்தித் தாளிட் டார்.

''ஏன்?'' என்று பயந்தபடியே கேட்டாள் ராஜம்.

''கொஞ்சம் ரகசியமா உன்னோட பேச வேண்டியிருக்கு. டிரைவரோ, முத்துவோ வந்துடக் கூடாது.''

''அப்படி யாரும் வந்துடமாட்டா. கத வைச் சாத்தறது தப்பு. கதவைத் திறந்து வெச்சுடுங்க.''

''பயப்படாதே. உன்னை ஒன்னும் பண் ணிட மாட்டேன்'' என்று சிரித்தபடியே அவளருகில் வந்து அவள் தோள் மீது கை வைத்தார்.

''வேண்டாம். கையை எடுங்கோ'' என்று அவர் கையைத் தட்டி விட்டாள்.

''சும்மா கலாட்டாப் பண்ணாதே. நல்ல தனமா நடந்துக்க'' என்று இரண்டு கைகளை யும் அவள் இரண்டு தோள்களின் மீது வைத்து அழுத்தினார்.

''இது துரோகம். உங்களை நம்பி என்னை இங்கே விட்டுட்டுப்போன எங்கப்பாவுக்கும் உமா மாமிக்கும் நீங்க பண்ற பெரிய துரோகம்'' என்று ராஜம் கத்தினாள்.

''சும்மா கத்தாதே. உன் கத்தல் வெளியே கேக்காது. அதுக்காகத்தான் இந்த ரூமுக்குக்

கூட்டிண்டு வந்தேன். உமாவுக்கு நான் இன்னிக்கு ஒண்ணும் புதுசா துரோகம் பண்ணலே. கல்யாணமான நாலாவது நாள் லேருந்தே நான் வேற பெண்களண்டை போயிட்டுத்தான் இருக்கேன். உன்னைப் போல யாரும் என்கிட்டத் தகராறு பண்ணை இல்லே'' என்று அவளை இழுத்து அணைத்துக் கொண்டார்.

''சீ விடுங்கோ. அப்புறம் நான் மரியாதை இல்லாம ஏதாவது சொல்லிடுவேன்''

''நீ என்ன வேணா சொல்லிட்டுப் போ. இன்னிக்கு நீ என் இஷ்டத்துக்கு இணங்கியே ஆகணும்'' என்று அவள் முகத்தை நோக்கிக் குனிந்தார்.

அவள் தன் கைகளால் அவர் முகத்தை வேறு திசையில் திருப்பினாள். அவரது பிடியிலிருந்து திணறினாள்.

''இதுவரைக்கும் நான் ஆசைப்பட்ட பெண்ணை அடையாம இருந்ததே இல்லே. இந்த விஷயத்திலே தோல்விங்கறதே எனக்குத் தெரியாது. பேசாம என் விருப்பப்படி நடந்துக்க'' என்று கூறியபடி அவளது புடவைத் தலைப்பை இழுத்துக் கீழே விட்டார். ரவிக்கையின் ஹூக்கின் மீது கை வைத்தார்.

''சரி. உங்க இஷ்டப்படியே நடந்துக்கறேன்'' என்றாள் ராஜம் திடீரென்று.

சிவகுரு மகிழ்ச்சியும் ஆச்சரியமும் கொண்டார்.

''தட்ஸ் லைக் எ குட் கர்ல்'' என்றார்.

''ஒரு நிமிஷம். நீங்க அந்தப் பக்கம் திரும்பிக்குங்க. நீங்க ரவிக்கையைத் தொட்டா எனக்குக் கூச்சமா இருக்குது. நானே கழட்டறேன். அப்புறம் திரும்புங்க'' என்றாள்.

''ஓ யெஸ்'' என்று சிவகுரு அவளுக்கு முதுகைக் காட்டிக் கொண்டு நின்றார்.

சில விநாடிகள் கழிந்தன.

''திரும்பலாமா?'' என்றார் சிவகுரு.

''ஊம்.''

ஆர்வத்துடன் திரும்பினார்.

அடுத்த நொடியில் ராஜம் எதையோ அவர் முகத்தை நோக்கி வீசினாள்.

''ஐயோ, போச்சே என் கண்ணு. ஐயோ'' என்று அலறியபடியே இரண்டு கைகளாலும் கண்ணைத் தேய்த்து விட்டுக் கொண்டார்.

ராஜம் பாக்கியிருந்த மிளகாய்ப் பொடியையும் அவர் மீது எறிந்து விட்டு அறையின் கதவைத் திறந்து கொண்டு வெளியே பாய்ந்து சென்றாள். வெளியே வந்ததும் யாருக்கும் சந்தேகம் ஏற்படாத வண்ணம் சாதாரணமாக வேலையை முடித்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்புகிறவள் போல மெதுவாக நடந்து சென்று தெருவில் இறங்கி வீட்டை நோக்கிச் சென்றாள்.

சிவகுருவுக்குக் கண் எரிச்சல் தாங்கவில்லை. இரண்டு கண்களிலும் நெருப்பை வாரிக் கொட்டிவிட்டது போலிருந்தது. கண்களைத் திறக்கவும் முடியவில்லை. கூச்சல் போடவும் முடியாமல் திருடனுக்குத் தேள் கொட்டியது போல் என்று சொல்வார்களே அந்த நிலையில் தத்தளித்தார். ஆனால் எரிச்சல் தாங்க முடியாமல் போகவே வேறு வழியில்லாமல் ''முத்து, டேய் முத்து!'' என்று கதறினார்.

''ஐயா கூப்டிங்களா?'' என்று முத்து ஓடிவந்தான்.

''டேய், கண்ணுல என்னமோ விழுந்துட்டுது. கண் எரியுது. தண்ணி எடு'' என்றார்.

முத்து, டம்ளரில் அவர் குடிப்பதற்காக ராஜம் கொண்டு வந்து வைத்திருந்த தண்ணீரை எடுத்துக் கொடுத்தான். அதைக் கண்களில் வாரி அடித்துக் கொண்டு கண்களை அலம்பி விட்டுக் கொண்டார். ஆனாலும் எரிச்சல் போகவில்லை. கண்களே போய் விடுமோ என்ற பயம் அவருக்குத் தோன்றவே, அவர் உடலில் ஒரு நடுக்கம் ஏற்பட்டு விட்டது. கண்கள் போவதோடு மானமும் போய்விடும் என்று தோன்றியபோது அவருக்கு உயிரே போய்விடும் போல் இருந்தது.

'பாவி, இப்படிச் செஞ்சுட்டுப் போயிட்டாளே, அவளைச் சும்மா விடக் கூடாது. அவ அப்பனையும் வீட்டை விட்டுத் துரத்தியடிக்க வேண்டும்' என்று அந்த நிலையிலும் அவர் மனம் கறுவியது.

''சமையற்கார அம்மா எங்கிங்க? நீங்க இன்னும் சாப்பிடலே போலிருக்கே?'' என்று முத்து கேட்டான்.

''நான்தான் போகச் சொல்லிட்டேன். நீ போய் டிரைவரை உடனே லஸ்லுக்குப் போய்க் கண் டாக்டர் மோகனைக் கூட்டிக்கிட்டுவரச் சொல்லு. அஞ்சு நிமிஷத்துல வரணும்'' என்றார்.

''சரிங்க'' என்று அவன் ஓடினான்.

தொலைபேசி மணி அடித்தது. தட்டுத் தடுமாறியபடி கைகளால் துழாவிக்கொண்டே போனை அடைந்து ஒலிவாங்கியை எடுத்துக் காதில் வைத்துக் கொண்டு ''ஹலோ, சிவகுரு'' என்றார்.

''நான்தான் உமா பேசறேன் டெல்லியிலிருந்து.''

''என்ன சொல்லு. நாளைக்குப் புறப்படுறீங்களா?''

''புறப்படறோம். இன்னிக்கு இங்கே ஒரு பெரிய அக்கிரமம் நடந்துட்டுது..விஜயா...'' சொல்லிக் கொண்டிருக்கும்போதே தொலைபேசித் தொடர்பு அறுந்து போய்விட்டது.

மறுபடியும் மணி அடிக்கும் என்று ஒலிவாங்கியை வைத்துவிட்டுக் காத்திருந்தார்.

மணியடிக்கவேயில்லை. எஸ். டி. டி. தொடர்பு மறுபடியும் கிடைக்கவில்லை போலிருக்கிறது. என்னமோ 'அக்கிரமம்... விஜயா...' என்று சொல்ல ஆரம்பித்தாளே, என்னவாயிருக்கும்? விஜயாவுக்கு என்ன? இன்றைக்குத் தனக்கு ரொம்பவும் போதாத காலம் போலிருக்கிறது. தானே டயல் செய்யலாம் என்றாலோ கண்களை இன்னும் திறக்க முடியவில்லை.

டாக்டரையும், டில்லியிலிருந்து சமாசாரத்தையும் எதிர்பார்த்துத் தத்தளித்துக் கொண்டிருந்தார் சிவகுரு. ஒவ்வொரு நொடியும் ஒவ்வொரு மணி நேரம் போலத் தோன்றிக் கொண்டிருந்தது. (தொடரும்)

ஒவ்வொரு துளியிலும் தேர்ந்தெடுத்த தேங்காய்களின் நறுமணம்!

**Yendelux**
**coconut oil**

**என்டிலக்ஸ்**
தேங்காய் எண்ணெ

15 ... டின்களிலும் 1 லிட்டர் 500
... பாட்டில்களிலும் கிடைக்கிறது

மு. மு. நாகலிங்க நாடார் சன்ஸ்
கொல்லம்—கேரளா
போன் : ஆபிஸ் : 2244. 4494 மில்ஸ் : 2266. 4611

DISTRIBUTORS FOR TAMIL NADU
M. M. NAGALINGA NADAR
VIRUDHUNAGAR. Phone : 3107. 3745.



# ரூபாய்க்கு மூனு கொலை

[சமுதாயத்தில் குட்டப்பட்டுக் குனிந்த அப்புவின் உள் மனம் புரட்சி செய்து அவனையே மாலை நேரங்களில் ஆல்ஃபிரெட் என்னும் பயங்கரவாதியாக, ரூபாய்க்கு மூனு கொலை செய்யும் முரடனாக மாற்றுகிறது. அப்புவின் அப்பாவித்தனம் நகைப்புக்கு இடமாகிறது எனில், ஆல்ஃபிரெட்டின் ஆற்றல் போலிஸாரைத் திணற அடிக்கிறது!

ஒரு நாள் அப்புவைக் கொலை செய்ய அவன் மனைவியே ஆல்ஃபிரெட்டின் உதவியை நாடும்போதுதான் ஆல்ஃபிரெட் கலங்கிப் போகிறான். அப்புவின் மனைவி கொலை செய்யப்படுகிறாள். போலீஸார் அவள்காதலன் ரஞ்சித்தைச்சந்தேகிக்க, அவன் ஆல்ஃபிரெட்டிடம் ஓடிவந்து சாவித்திரியைக் கொன்றது யார் எனக் கண்டுபிடித்துத் தன்னைக் காப்பாற்றுமாறு வேண்டுகிறான். ''சாவித்திரியைக் கொன்றது அப்பு''என்று ஆல்ஃபிரெட் கூறப் பிரமிக்கிறான் ரஞ்சித்.]

ரஞ்: ஆல்ஃபிரெட்....

ஆல்: ஆல்ஃபிரெட் இல்லேடா... அப்பு!

ரஞ்: அப்ப.... அந்த அப்பு....?

ஆல்: அப்புவும் நானே! ஆல்ஃபிரெட்டும் நானே. அப்பாவி அப்புவோட மறுபக்கம்தாண்டா நான்! வாடா, என் சக்களத்தா! என் கூட இருந்தே குடியைக்கெடுத்தவனுச்சே நீ! ஆபீஸ் டிராமாவிலே என்னை துச்சாதனன் வேஷம்போடச் சொல்லிட்டு என் வீட்ல நீ அசல் துச்சாதனனா நடந்துக்கிட்டவனுச்சே!

(ஒரு அறை கொடுக்க ரஞ்சித் நாற்காலியின் விழுகிறான்.)

ரஞ்: ஆல்ஃபிரட்... வந்து.... நீ என்னைத் தப்பாப் புரிஞ்சுக்கிட்டே.

ஆல்: ஆமா! நீ நல்லவன்னு தப்பாத்தாண்டா புரிஞ்சுக்கிட்டேன். அது சரி எப்ப நீ சாவித்திரி மனசைப் புரிஞ்சுகிட்ட?

ரஞ் (பயந்து): அப்பு.... ஆல்ஃபிரெட்...

ஆல்: எந்தப் பேரைச் சொல்லிக் கூப்பிடறதுன்னு தெரியலையா? ஹீரோ மாதிரி நீ அவளோட பேசினதை பீரோக்குப் பின்னாடி ஒளிஞ்சிருந்து கேட்ட ஜீரோ நான் தாண்டா. சொல்லு.

(சட்டையைப் பற்றி அவனை உலுக்குகிறான்.)

ரஞ்: ஸ்கூட்டர்ல... போகும்போது.

ஆல்: மொதல்ல ஸ்கூட்டர்ல பின் சீட்டை எடுத்திரணும்! எப்படி.... எப்படி அது?... ஸ்கூட்டர்ல அவ உட்காரச் சம்மதிச்சப்ப ஓரளவுக்குப் புரிஞ்சிக்கிட்ட... உரசி உக்காந்ததும் முழுசா மனசைப் புரிஞ்சுக்கிட்ட.... அப்படித்தானே! டேய்! அவ பத்தரை மாத்துத் தங்கம்! அதான் நீ உரசிப் பாத்துத் தரத்தை எடை போட்டிருக்க! எங்க... என்னை உரசிப்பாரு. நான் நெருப்பு. நீ பத்தி எரிஞ்சிடுவ.

ரஞ்: நானு எந்தத் தப்பும் பண்ணலே. சாவித்திரிதான்...

ஆல் (மீண்டும் ஒரு அறை கொடுத்து): செத்தவங்களைப்பத்தித் தப்பாப் பேசக்கூடாது.

**வியட்நாம் வீடு சுந்தரம்**

இந்த நாட்டில துரோகி செத்தாலும் அவன் பேர் தியாகிதான்!

ரஞ்: நான்...நான் சந்தர்ப்பச் சூழ்நிலையில தப்புப் பண்ணிட்டேன். என்னை விட்டுடு.

ஆல்: சந்தர்ப்பத்தை அக்கிரமத்துக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கிறவன்தான் கொலை செய்யப்பட வேண்டிய முதல் துரோகி!

(அப்போது அங்கு பதறியபடி வருகிறாள் அருந்ததி.)

அரு: ஆல்ஃபிரெட்! நீங்க என்னைக் காப்பாத்துவீங்கன்னு பார்த்தேன். காப்பாத்தாம விட்டுட்டிங்களே! என் மேல் கேஸ் போட்டு என்னை சஸ்பெண்ட் பண்ணியிருக்காங்க. ஹெல்ப் பண்ணுங்க.

ஆல்: நானா? எனக்குத்தான் மூளையே கிடையாதே. நான்தான் உங்க கணக்குப்படி மிகப் பெரிய முட்டாளாச்சே.

(அருந்ததியைப் பார்க்க ஆல்ஃபிரட் சிரித்தபடி திரும்ப அருந்ததி அதிர்ச்சி அடைகிறாள்.)

அரு: அப்பு... நீயா ஆல்ஃபிரெட்?

ஆல்: ஆமா! என் கூர்மையான மூளையை நிரூபிக்க நான் எடுத்த அவதாரந்தான் ஆல்ஃபிரெட். மேடம்! இன்னிக்கு ரொம்ப நிறைஞ்ச நாள். உங்களுக்கு விடை கொடுத்து அனுப்ப வேண்டிய தினம்! ....மேடம்.... இந்த ரஞ்சித்... என் மனைவிகூடத் தகாத உறவு வைச்சிருந்தான். அது தப்புத்தானே?

அரு: தப்புத்தான். அடுத்தவன் மனைவி பேர்ல ஆசைப்படறவன் அழிஞ்சுதான் போவான்.

ரஞ்: அப்படிப் பார்த்தா இவளும் அழிஞ்சுதான் போவா...

அரு: நீ யார்ரா என்னை அழியச் சொல்றதுக்கு? நல்லவன் மாதிரி நடிச்ச துரோகி.

ரஞ்: நீ என்னடி ஒழுங்கு? அப்புவை அவமானப்படுத்தியவளே நீதான்.

(இருவரும் வாக்குவாதம் செய்ய அதை ஆல்ஃபிரெட் ரசிக்கிறான்.)

ஆல்: சே... சரியான குழாயடிச் சண்டை கேஸ். வெயிட் வெயிட். உங்களுக்குள்ள யார் வாழணும், யார் அழியணும்னு தானே சண்டைபோடறீங்க? ஒரு வேலை செய்வோம். நான் ஒரு ரூபாயைச் சுண்டி விட்டுப் பூவா தலையா போடறேன். சிங்கம் வந்தா ரஞ்சித் சாகணும். நம்பர் வந்தா மேடம் சாகணும். என்ன?

(இருவருமே பயந்து பதற ரூபாயைச் சுண்டுகிறான் ஆல்ஃபிரெட்.)

ஆல் (அருந்ததியிடம்): ஸாரி மேடம். பொதுவா லேடீஸ் ஃபர்ஸ்ட்னு ஒரு மரியாதை காட்டறதுண்டு.

அரு: அப்பு....!

ஆல்: ஆறு இப்ப சிங்கம் வந்திருக்கு. முதல்ல ரஞ்சித்....

ரஞ்: ஆல்ஃபிரெட்.... அப்பு.... என்னை விட்டுடு!

ஆல்: உனக்கு எந்த மாதிரிச் சாவு பிடிக்கும்? சொல்லு, ரஞ்சித்!

ரஞ்: எனக்கு வயசாகிச் சாகிறதுதான் பிடிக்கும்!

ஆல்: சாவோட பிடியில சிக்கினப்புறம்கூட உனக்கு நல்ல நகைச்சுவையுணர்வுடா! நீ இருந்து என்ன சாதிச்சிடப் போறே? பூமிக்குப் பாரம்! (பிஸ்டலை எடுத்து) இந்த பிஸ்டல்ல குண்டு போட்டு சேம்பரைச் சுத்தி விட்டுட்டேன். குண்டு எங்க இருக்கு எப்ப வெடிக்கும்னு தெரியாது. சுடறேன். வெடிச்சா செத்துடு. இல்லை உன் அதிர்ஷ்டம்!

(துப்பாக்கியுடன் உள்ளே வருகிறார் இன்ஸ்பெக்டர்.)

இன்: ஸ்டாப் இட்! டிராப் தி பிஸ்டல்! அப்பு! வீட்ல நீ புஸ்தகத்தை இடது கையாலே பிடிச்சதுமே உன்னைச் சந்தேகப்பட்டேன். உன்னைக் கண்காணிச்சேன். பின்தொடர்ந்தேன். இப்பத்தான் உனக்குப் பின்னாடி இருந்த ஆல்ஃபிரெட் யார்னு தெரிஞ்சது....!

ஆல்: சபாஷ் இன்ஸ்பெக்டர்! உங்க திறமையைப் பாராட்டறேன்! இனிமே நான் தப்ப முடியாது! சரண் டைஞ்சிடறேன். (ஒரு ஃபைலை எடுத்து) இந்த ஃபைல்ல என்னென்ன குற்றங்களை எப்ப,எப்ப, எப்படிச் செஞ்சேன்னு எழுதியிருக்கேன். இந்தாங்க....

(ஃபைலை இன்ஸ்பெக்டரிடம் வீச அவர் அதைப் பிடிக்கும் சமயம் மின்னல் வேகத்தில் அவர் பிஸ்டலைப் பிடுங்கிக்கொள்கிறான் ஆல்ஃபிரெட்.)

○ "பிஸ்டல்ல குண்டைப்போட்டு சேம்பரைச் சுத்தி விட்டுட்டேன். குண்டு எங்க இருக்கு தெரியாது! சுடறேன்! உன் அதிர்ஷ்டம்!"

படங்கள் சு, வே. ரா. மோகன்



இன்ஸ்பெக்டர் நிராயுதபாணியாய் நிற்கிறார்.)

ஆல்: உனக்கு வயசு பத்தலே பிரதர். என்ன இவ்வளவு சுலபமா ஏமாந்துட்டீங்க. ஆனா நீங்க வந்தது நல்லதாப் போச்சு. உங்க கிட்டப் பேசணும் போல இருக்கு. அப்பு ஏன் ஆல்ஃபிரெட்டாக மாறினான் என்று சொல்ல விரும்புகிறேன். சின்ன வயசிலே அப்பு ரொம்பக் கஷ்டப்பட்டிருக்கிறான். ஸ்கூல் படிக்கும்போது என்னைவிடப் பெரிய பசங்க என்னை மிரட்டிக் கொண்டு போய் எறும்புப் புத்துல நிக்க வச்சுடுவாங்க. அதுதான் அவங்களுக்கு வேடிக்கை. அவங்களை ஒண்ணும் செய்ய முடியலேங்கிற தாழ்வு மனப்பான்மை. அதனாலே அவங்க போனதுக்கப்புறம் அந்த எறும்பெல்லாம் எடுத்து ஒன்னொன்னா நசுக்குவேன். காலேஜிலேயும் இதே கதிதான். பணக்காரப் பயலுக செய்யற தப்புக்கெல்லாம் நான்தான் மாட்டிக்கிட்டு முழிப்பேன். படிப்பு முடிஞ்சுது. வேலே கிடைச்சுது. அங்கேயும் நான்தான் நசுக்கப்பட்டேன்....

இன்ஸ்பெக்டர், இப்படிக் குட்டப்பட்டும் நசுக்கப்பட்டும் அடக்கி வைக்கப்பட்டிருப்பது நான் மட்டுமில்லே. இந்தத் தேசத்திலே எத்தனையோ ஆயிரக் கணக்கான பேர் இருக்காங்க. அதனாலே எச்சரிக்கிறேன்! அப்புங்களை நசுக்க நசுக்க ஆல்ஃபிரெட்டுங்க தோன்றிக்கிட்டே இருப்பாங்க! இதை உங்களைப் போல ஆட்சி அதிகாரத்திலே இருக்கிறவங்க எவ்வளவு சீக்கிரம் புரிஞ்சுக்கிறீங்களோ நல்லது... இன்ஸ்பெக்டர்....! என் வாழ்க்கையில எனக்கிருந்த ஒரே பிடிப்பு என் மனைவி. அவளும் என் நண்பனோட சேர்ந்து எனக்கே துரோகம் செஞ்சா. இந்த அருந்ததி என்னை என்னென்னலாம் பாடு படுத்தினா... எல்லாத்துக்குமா சேர்த்து இப்ப ரூபாய்க்கு மூணு கொலை! உங்களையும் சேர்த்துத்தான் சொல்றேன்!

(இன்ஸ்பெக்டர் ஆல்ஃபிரெட் பின்னால் யாரோ இருப்பது போல் நடித்து உதவிக்கு அழைக்க அப்புவின் கவனம் திரும்புகிறது. அந்தக் கணத்தில் இன்ஸ்பெக்டர் அப்புவின் கைத் துப்பாக்கியைப் பிடுங்க முயல இருவரும் சண்டை போடுகின்றனர். ஆல்ஃபிரெட் அந்தக் கைகலப்பினிடையே தன்னைத் தானே சுட்டுக் கொண்டு சரிகிறான்.)

ஆல் (மரணத்தருவாயில்): ரஞ்சித்! அப்புவைக் கொல்ல ஆல்ஃபிரெட்டுக்கு முன் பணம் கொடுத்தீங்க... அதன்படி ஆல்ஃபிரெட் அவனைக் கொன்னுட்டான். ஆனா ஆல்ஃபிரெட் போலீஸ் கிட்ட மாட்டிக்கலே.... தப்பிச்சுக்கிட்டு மேலே மேலே போயிட்டிருக்கான்!

(ஒரு குலுக்கலுக்குப் பின் அவன் உடல் சலனமற்றுப் போகிறது.)

**(முற்றும்)**

# வெற்றி நமதே

● மாடர்ன் தியேட்டர்ஸ் படம்.
பெயரில்தான் மாடர்ன்.
கதை ரொம்ப ரொம்ப ஓல்ட்!

விலைமதிப்பற்ற சிவலிங்கம். அதைத்திருடக் கொள்ளை கோஷ்டி. மூன்று குழந்தைகளைப் பெற்றோர்களிடமிருந்து பிரித்துவிடுகிறார்கள். மூவரில் ஒருவனுக்கு முதுகில் மச்சம். பிரிந்தவர்கள் வெவ்வேறு இடங்களில் வளர்ந்து தந்தையைக் கொன்றவனைப் பழி வாங்க ஒன்று சேருகிறார்கள்.

சண்டைக்கு ராஜீவ். காதலுக்கு ராஜேஷ். சிரிப்புக்குத் தும்பு.

மூச்சு விடுவதற்குள் ஒரு சண்டை. திகட்டுகிறது.

கதாநாயகி வனிதா கருவேப்பிலே மாதிரி பயன்படுத்தப்பட்டுள்ளார்.

பல வருடங்களுக்குப் பிறகு பி. எஸ். வீரப்பாவின் அட்டகாசமான சிரிப்பைப் பார்க்கிறோம்.

டைரக்டர் ஆர். சுந்தரம் அலட்சியமான போக்கில் தயாரித்து முடித்திருக்கிறார்.

பாலம் கவிழ்கிறது. சட்டிகள் உடைகின்றன. பலர் செத்து மடிகிறார்கள். மண்டபம் எரிகிறது.

நேரம் விரயமாகிறது.

# அழகிய கண்ணே

● கொலை செய்யப்பட்ட நாட்டியக்காரி, மறு பிறவியில் குழந்தை வடிவில் தோன்றிக் கொன்றவனைப் பழிவாங்கும் கதை.

பழி உணர்வை வேகப்படுத்தாமல் எவ்வளவு மென்மைப்படுத்தித் திரையில் காட்ட முடியுமோ அவ்வளவு மென்மையாக்கிக்காட்டியுள்ளார் மகேந்திரன். நடக்கப்போகும் நிகழ்ச்சிகளை முன்கூட்டியே உணரும் சக்தியைக் குழந்தை மூலம் காட்டிப் படத்தின் வேகத்திற்குப் பயன்படுத்திக் கொண்டுள்ளார்.

குழந்தையாக நடிப்பவர் பேபி அஞ்சு. பொம்மையைக் கையில் அணைத்துக்கொண்டு அதிகம் பேசாமல் கண்களாலேயே அவரைப் பேசவைத்திருப்பது பாராட்டுக்குரியது.

கதையின் ஆரம்பத்தில் சிற்பியை நாட்டியக்காரி காதலிப்பதைச் சுருக்கமாகக்காட்டி விட்டு, டைட்டில்களைப் போட டைரக்டர் தேர்ந்தெடுத்துள்ள இடத்திலேயே அவரது முத்திரை தெரிகிறது.

சிற்பி சரத் பாபுவின் மெழுகுப்பொம்மை போன்ற தோற்றம், அலட்டிக்கொள்ளாத நடிப்பு இரண்டுமே அக்கதாபாத்திரத்திற்குச் சிலை செதுக்கிய மாதிரி வடிவம் கொடுத்து விடுகிறது.

நாட்டியக்காரி சுமலதா சிற்பியின் மேல் கொண்ட காதலுக்குப் பின்னணி ரொம்பவும் பலவீனமானது. தனது நாட்டியத்தைப் பார்த்துச் சிலே செதுக்கிய ஒரே



# அழகிய கண்ணே!

# வெற்றி நமதே

காரணத்துக்காக அவள் அவனை நேசிப்பாளா? காதலில் தோல்வி கண்டதும் காலில் ரத்தம் பீறிட அப்படி ஆடி மயங்கி விழுவாளா? அந்த நடனத்தில் ஆவேசம் இல்லையே!

சுகாசினி வித்தியாசமாக நடித்திருப்பதோடு இடித்தும் இருக்கிறார். தன் மாமன் முகவாயை இடித்தவாறே ''ஏமாமா கோவமா'' எனப் பாடி நடிக்கிறார். மாமா குடியிருக்கும் வீட்டுக்காரப் பெண்ணோடு (ரஜினி) இவர் மோதும் இடங்களெல்லாம் கதையின் வேகத்திற்குத் தடை.

பத்திரிகை ஆசிரியர் தேங்காய் சீனிவாசன் நிருபர் வெண்ணிற ஆடை மூர்த்தி இருவரும் கலகல.

குழந்தையை மறக்க முடியாத மாதிரி அவர்களைப் பெற்றோரையும் மறக்க முடியாது. கோயமுத்தூர் கிராமியப் பாஷையை அச்சுக் கோர்த்த மாதிரி அழகாகப் பேசிச் சிரிக்க வைக்கும் அடியார் குழந்தையின் அப்பாவாக நடித்துள்ளார். இவரது மனைவியாக வரும் காந்திமதி சில இடங்களில் கோயமுத்தூர் பாஷையைப் பேச மறந்து போகிறார்.

சாருஹாசனுக்கு சாமியார் வேடம் போலி என்றாலும் நடிப்பு அசல்.

அசோக்குமாரின் காமிரா தனி ஆவர்த்தனம் வாசிக்கிறது.

டைரக்டர் மகேந்திரனின் புதிய கண்ணோட்டத்திற்கு ஒரு சாம்பிள்: சரத் பாபு—சுகாசினி திருமணத்தை நேரிடையாகக் காட்டாமல் மாடு எச்சில் இலையைச் சுவைப்பது போலக் காட்டியிருக்கும் இடம்.

ஆனிப்படம் என்றாலும் கொட்டாவி வரவில்லை.

—திரைஞானி

அவனியில் அதிநவீன பேரணியைக் கொண்ட விமானப் பவனி இதுவே.
ஆயினும் பயணத்தின் கற்பனைத்தாகம் இன்னும் தணியவில்லை.




6SR2

# முகம் தரும் முயற்சி!

ஸ்தாபகர் கெராசிமோவ்

சமீபத்தில் டிஸ்கவரில் வந்த ஒரு கட்டுரை அசர வைத்தது. சோவியத் விஞ்ஞானிகள் மனித மண்டையோட்டை வைத்துக்கொண்டு அதற்கான மனிதனின் முகத்தையே திரும்ப உருவாக்கி விடுகிறார்கள். லெபடின்ஸ்கயா என்ற பெண் டாக்டர் தற்போது இந்த மனித வர்க்க சாஸ்திர உருவாக்கக் கலையில் நிபுணராக இருக்கிறார்.

மண்டையோட்டைத் தொட்டுத் தடவி, வருடி, கண் குழிக்குள் நுழைந்து அளவுகளை எடுக்கிறார்கள். ஒவ்வொரு மனிதனின் எலும்பிலும் நிறைய விஷயம் மறைமுகமாகப் பொதிந்துள்ளது.

இறந்த பின் சதை அழிகையில் முகத்தின் எல்லா அடையாளங்களும் மறைவதில்லை. உயிர் வாழ்கையில் கன்னச் சதையின் ஆழம், உதடுகளின் அகலம், மூக்கின் அகலம், கண்களின் அமைப்பு இவை எலும்பில் சில தடயங்களை விட்டுச் செல்கின்றன.

ஆயிரக் கணக்கான பிணங்களின் முகத்திலிருந்தும் உயிர்வாழ் மனிதர்களின் முகத்திலிருந்தும் இது போன்ற சதையளவுகளை எடுத்து ஒரு அகராதியே தயாரித்து வைத்திருக்கிறார்கள். குறிப்பிட்ட ஒரு மண்டையோட்டின் அளவுகளையும் இந்த அகராதியில் உள்ள சதை அளவுகளையும் ஒப்பிட்டு மண்டை

## துப்பு துலக்கலாம்!

- மனிதனின் கைரேகைகள், கட்டில், பீரோ, கதவு போன்ற பொருள்களில் மட்டுமே படியும் என்பதில்லை. ஒரு மனிதனின் ரேகை இன்னொரு மனிதனின் உடலிலும் பதிந்திருப்பதைக் கண்டுபிடிக்க வழி வகுத்துள்ளது விஞ்ஞானம்!

- பாதம் சுவடு தரையில் பதிந்திருந்தால் அதன் நீளத்தைக் கொண்டு ஒரு மனிதனின் உயரத்தைக் கண்டு பிடிக்கலாம்.

- மர்மமான முறையில் இறந்தவர்களின் எலும்புக் கூடு மட்டும் கிடைத்திருக்கும் பட்சத்தில் இறந்தவர்களின் வயதை அவர்களின் பற்களைக் கொண்டு கணக்கிடலாம்!

-ஏ. வி. எம். கணேஷ்

யோட்டின் மேல் ஒரு வகை களி மண் பூசி முகத்தையே கொஞ்சம் கொஞ்சமாக வடிவமைப்புச் செய்து விடுகிறார்கள். சில முகங்களை உருவாக்க ஒரு வருடம் கூட ஆகலாம். இப்படி உருவான முகத்தைப் பழைய போட்டோவுடன் ஒப்பிடுகையில் பிரமித்துப் போகுமளவு இரண்டும் ஒன்றாக இருப்பது விஞ்ஞானத்தின் வெற்றிதான்.

1. மண்டையோடு

2. அதன்மேல் ஆரம்பக் கட்டுமானம்

3. களிமண் நிரப்பப்படுதல்

4. முழுமையான முகம்







நவீன விஞ்ஞான யுக்திகள் முகம் செய்யும் பணியில் பெரிதும் உதவுகின்றன. உயிருடன் இருப்பவர்களின் சதை விவரங்களை எடுப்பது இதுவரை கடினமாக இருந்தது. தற்போது அல்ட்ராசானிக் ஒலியலைகளை முகத்தில் பாய்ச்சி அது சதையைத் தாண்டி எலும்பில் பட்டுப் பிரதிபலிப்பதால் உண்டாகும் வரை படத்தை வைத்துத் துல்லியமாகக் கணக்கிடுகிறார்கள். பிணங்களின் தசைகள் இறுகி விடுவதால் சில செய்திகள் கிடைக்காமல் போவது இதனால் தவிர்க்கப்படும்.

மண்டையோட்டிலிருந்து முகத்தைத் திரும்ப உருவாக்கும் இந்த முறை போலீஸ் துறையில் பெரிதும் உதவுகிறது. சில சமயம் எலும்புக்கூடு மட்டும் இருக்கும். வேறு செய்தி எதும் இருக்காது. முகத்தை உருவாக்கி அதை வைத்து ஆளைக் கண்டுபிடித்துக் கொலைகளைத் துப்பறிவது சாத்தியமாகிறது. அகழ்வாராய்ச்சியில் கிடைக்கும் மனித மண்டையோடுகளைக் கொண்டு பல ஆயிரம் வருடம் முன் வாழ்ந்த மனிதனின் உருவத்தைச் செய்து விடுகிறார்கள். சரித்திரம் சம்பந்தப்பட்ட புதிர்களை இதனால் விடுவிக்கிறார்கள். பல மனித இனங்கள் பரிணாம வளர்ச்சி அடைந்த விதம் தெளிவாகிறது.

இந்த முகம் தேடும் முயற்சி 1930ல் ரஷ்யாவில் கெராசிமோவ் என்ற விஞ்ஞானியால் ஆரம்பிக்கப்பட்டது. இவர் மியூசியங்களில் உள்ள எலும்புகளையும் ஆஸ்பத்திரியில் உள்ள இறந்த உடல்களையும் நுணுக்கமாக ஆராய்ந்து எலும்புக்கும் சதைக்கும் உள்ள கணித ஒற்றுமையைக் கண்டுபிடித்தார். அதோடு வயதானவர்களுக்கும் இளையவர்க்கும், ஆணுக்கும் பெண்ணுக்கும், ஒவ்வொரு இனத்திற்கும் இடையே மண்டை ஒட்டில் காணப்படும் வித்தியாசங்களையும் குறித்து வைத்துள்ளார்.

செயற்கை முகம் தத்ரூபமாகக் காட்சி தருகிறது. நரம்புகள் உயிர்ப்புடன் புடைத்துள்ளன. கண்களில் ஜீவன் தெரிகிறது. நிறமோ நிஜத்தை மிஞ்சுகிறது. உயிர் இல்லாததுதான் குறை.

-நளினி சாஸ்திரி



**வா**ணி மகால். தியாக பிரும்ம கான சபை. அமைச்சர் வந்தாகி விட்டது. நடன விருந்தளிக்க ஸ்ரீநிதியும் ஆஜர். ஆனால் ஒரு முக்கியமான நபருக்காக அனைவரும் காத்து நின்றனர். சபா நிர்வாகிகள் பரபரப்பாக ஃபோன் செய்தும் பலன் இல்லை. ஆவலுடன் எதிர்பார்க்கப்பட்ட அவர் ஏழு மணிக்குத் தான் வந்து சேர்ந்தார்: திருவாளர் மின்சாரம்! அப்புறம் விழா ஆரம்பிக்கவும், அமைச்சர் நெடுஞ்செழியன் வழக்கம்போல் ஒரு கை ஜிப்பா பாக்கெட்டுக்குள் சரண்புக இன்னொரு கை சில குறிப்புத் தாள்களைப் பற்றியிருக்க, 'ம்ம்', 'ம்ம்' என முடியும் தமது ஸ்டைலில் துளிக்கூட அரசியல் கலப்பின்றிப் பேசினார்.

• • •

இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் தொடக்க விழாவில் எல்லோருக்கும் ஒரு பெரிய உறை



# இசைத் துக்கடா





கிடைத்தது — ''வீட்டுக்குப் போய்ப் பிரிக்கவும்'' என்ற குறிப்புடன். பிரித்தால் வண்ணப் படக் காலண்டர் உள்பட எல்லாமே வீணை

புகைப்படங்கள்:

* குரல் வளம், லய ஞானம், சுருதி சுத்தம், உணர்ச்சி மிக்க, பாவ பூர்வமான, லட்சிய-லட்சண இன்னிசை ஆகிய அனைத்தையும் அருட் பிரசாதம் போல் பெற்றுள்ள திரு கே. வி. நாராயணசுவாமி அவர்களை மைலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் ஸங்கீத கலா நிபுணர் என்ற பட்டம் வழங்கிக் கௌரவித்துப் பெருமை யுற்றது. பட்டத்தை அளிப்பவர் ஸ்ரீ செம்மங்குடி.

* கலா ரசிகர்களின் பாராட்டுக்களையும் பத்திரிகைகள் பலவற்றின் சிறப்பு விமர்சனங்களையும் ஒருசேரப் பெற்றுள்ள குமாரி ஸ்ரீநிதி ரங்கராஜன் இந்த சீஸனில் நான்கு சபைகளில் நடனக் கச்சேரி செய்து தமது புகழை மேலும் வளர்த்துக் கொண்டார்.






பாலசந்தர் புகழ் பாடும் புராணங்கள். உபயம்: வேறு யார்? வீணை பாலசந்தரே தான்!

தமது பேச்சில் விமர்சகர்களை வாங்கு வாங்கு என்று வாங்கிய அவர் இன்றைய இளம் இசைக் கலைஞர்களுக்கு ஷொட்டுக்

---

⌘ பூச்சி ஸ்ரீனிவாச அய்யங்காரின் கிருதிகள், வர்ணங்கள், ஜாவளிகள் அடங்கிய நூலை வெளியிட திரு வி. வி. நரசிம்மன் (படம்) எடுத்துக் கொண்ட முயற்சி வெற்றி பெற்றுள்ளது. பூச்சி ஐயங்காரின் நேரடி சிஷ்யர் சேலம் துரைசாமி ஐயங்காரிடம் இருந்த கைஎழுத்துப் பிரதிகளைச் சேலம் செல்லம் ஐயங்கார் சரிபார்த்து நூலைத் தயாரித்துள்ளார்.

⌘ உச்சிஷ்ட கணபதி மீதான சுப்ரபாதம், அஷ்டோத்ர சதநாமாவளி முதலியவற்றை திருமதி ஷியாமளா சிவராமன் (படம்) குரலில் டேப்பில் பதிவு செய்து "சங்கீதா" வெளியிட்டிருக்கிறது. இசை அமைத்தவர் தஞ்சை சாந்தாசிரமம் ஸ்ரீ ராமானந்தேந்திர சரஸ்வதி சுவாமிகள். ஜஸ்டிஸ் ராம பிரசாதராவ் தலைமையில் ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம் டேப்பை வெளியிட முதல் கேஸட்டைப் பெற்றுக்கொண்டவர் திரு டி. எஸ். பார்த்தசாரதி.

கொடுத்தது ரசிக்கும்படி இருந்தது: 'அன்று லட்சிய சங்கீதம் கேட்டோம்; இன்று புதிய தலைமுறைக் கலைஞர்கள் லட்சியத்துடன் லட்சணத்தையும் இணைத்துள்ளனர்' என்றார் அழகாக.

பேருரையின் முடிவில் அவர் மேடையில் ரசிகர்களின் முன் சாஷ்டாங்கமாக விழுந்தது தான் என்னமோ போலிருந்தது. "என்ன ஸ்டண்ட் அடிக்கிறார்" என்ற கமெண்ட்டும் காதில் விழுந்தது.

• • •

கிருஷ்ண கான சபையில் உரத்துறை அமைச்சர் வசந்த் சாத்தே, "என்னை எதற்கு அழைத்தார்கள் என்று யோசித்தேன். ஒரு விதத்தில் எனக்கும் கல்சருக்கும் தொடர்பு உண்டு — அக்ரிகல்சரைக் குறிப்பிடுகிறேன்!" என்றார். ஜோவடையை ரசிப்பது கஷ்டமாக இருந்தது எனில் இதே அறுவையை ஆர்.வி. சுவாமிநாதனும் தமிழிசையில் கூறப்போக அலுப்பு மருந்தை நாடத் தோன்றியது!

• • •

வழுவூர் கலை விழாவில் செம்மங்குடி, நீர்-நில வளம் மிக்க தஞ்சையின் கலை வளத்







தையும் சிலாகிக்க, சட்டமன்றத் தலைவர் திரு ராஜாராம் தாம் வறண்ட பிரதேசமான சேலத்திலிருந்து வருவதை விசனத்துடன் கூற போக, அடுத்துப் பேசிய நீதிபதி கோகுல கிருஷ்ணன் ராஜாராமைத் தாங்க முன்வந்தார்: ''24 மணி நேரம் இடைவிடாமல் நடந்த நாதஸ்வர யக்ஞத்தை ஆயிரக் கணக்கான மக்கள் கூடியிருந்து கேட்டது சேலத்தில் அல்லவா!'' என்றார்.

• • •

தமிழிசையில் சீர்காழிக்கு விருது கொடுத்தாகிவிட்டது. ''இனி அவர் தமிழில் **மட்டுமே** பாடவேண்டும்'' என்று லெ.ப.கரு. ராமநாதன் செட்டியார் கூற — அதை விளையாட்டாகச் சொன்னாரோ என்னவோ — சீர்காழி இடுக்கிட்டுச் சற்று மிரண்டும் போனதுதெளிவாகத் தெரிந்தது!

• • •

செம்பை நினைவு இசைக் கேந்திரத்தில் தொடக்க விழாவில் ஒரு காவி உடை சாமியார் பென்ஸ் காரில் வந்து இறங்கினார். 'சரி, விழாவின் வெற்றிக்கு ஆசிகூற வந்திருக்கிறார்' என்று நினைத்தவர்களுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. டி. வி. கோபாலகிருஷ்ணன், எம். எஸ். அனந்தராமன் பக்கவாத்தியம் வாசிக்க, ஜம்மென்று கச்சேரி செய்தார் அந்த இளம் துறவி. பெயர்: வித்யா பூஷண தீர்த்த சுவாமிஜி.

• • •

• சாஸ்திரி ஹாலில் சுவாதித்திருநாள்நினைவு விழா. ''சுவாதித்திருநாள் கிருதிகள் அவர் எழுதியவைதானா?'' சர்ச்சையின் எதிரொலி கேட்டது. டி.கே. கோவிந்தராவ் தாம் இந்தச்சர்ச்சையை ஆரம்பித்துவைத்த கே.பி. சிவானந்தத்திடம் பேசிக் கொண்டிருந்ததாகக் கூறவும் அவையோரிடம் ஆவல் ஊர்ந்தது. திரு சிவானந்தம், 'நான் நாட்டியப் பாடல்கள் மட்டும்தான் சுவாதித்திருநாள் இயற்றியது அல்ல என்று குறிப்பிட்டேன்: நிருபர் ஒட்டு மொத்தமாக எல்லாப் பாடல்களைப் பற்றியுமே நான் அப்படிச் சொன்னதாக எழுதி விட்டார்' என்று கோவிந்தராவிடம் கூறிவருத்தப்பட்டாராம். அப்படியானால் சிவானந்தம் ஏன் மறுப்பு முன்பே வெளியிட்டிருக்கக் கூடாது? சர்ச்சையை வளர்த்தால் அதனால் பயனடைவது பத்திரிகைதான் என்று சும்மா இருந்துவிட்டாராம்!

• • •

அகாடமியில் ஏதாவது ஒரு கச்சேரிக்குக் கூட்டம் முண்டியடித்துக் கொண்டு உள்ளே நுழைந்தது: 'கேட் கிராஷ்' பண்ணவே முயன்றது எனில் அது செம்மங்குடி கச்சேரிக்குத்தான். ''ஐம்பது ரூபாய் டிக்கெட் கேட்டேன்: இல்லையென்று விட்டார்கள்'' என்று ஒரு ரசிகர் குறைப்பட்டார். டிக்கெட் கிடைத்து அரங்கில் நுழைந்த அதிர்ஷ்டசாலிகளுக்குச் செம்மங்குடி ஏமாற்றமளிக்கவில்லை.

• • •

மின்வெட்டுக்கூட ஒரு விஷயத்துக்கு உபயோகமாக இருந்தது. நேதுனூரு(Nedunooru இதுதான் லேட்டஸ்ட் ஸ்பெல்லிங்!) கச்சேரியின்போது கிருஷ்ண கான சபையில் விளக்குகள், மைக் அவுட்! காரியதரிசி யக்ஞராமன் ரசிகர்களை முன்னுக்கு வரச் சொன்னார். ஐந்து ரூபாய் டிக்கெட் வாங்கியவர்களுக்குக் கூட 25 ரூபாய் ஸீட் கிடைத்தது. பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் மைக் இன்றி கச்சேரிதொடர்ந்ததுபழங்காலச்சூழலை நினைவூட்டியது. (ஆனால் அந்த நாளைய குரல் வளத்துக்கு எங்கே போக?) போதாக் குறைக்கு ஐயப்பன் ஊர்வல வாத்திய முழக்கம் வேறு! லால்குடி ஜெயராமன் அதையும் பொருட்படுத்தாமல் கல்யாணி ராகத்தை வாசிக்க, ஒன்றுமே கேட்காது போனாலும் அவர் சிறப்பாகத்தான் வாசித்திருப்பார் என்று ரசிகர்கள் கரகோஷம் செய்ய, சபா நிர்வாகிகள், கலைஞர்கள், ரசிகர்கள் ஆகிய முத்தரப்பினரது பண்பாடும் 'பளிச்'சிட்டது. உடனே 'பளிச்'சென்று விளக்கும் வந்துவிட்டது! ஊர்வல ஒலியும் தேய்ந்து மறைய, மைக் இயங்க நேதுனூரு அமர்க்களப்படுத்திவிட்டார்.

• • •

இந்த ஆண்டு மிகவும் சிலாகித்துப் பேசப்பட்ட, எழுதப்பட்ட ஒரு நிகழ்ச்சி வெராமனின் மிருதங்க 'டெமான்ஸ்ட்ரேஷன்'. ''அவர் வாசிக்கும் கச்சேரி ஒவ்வொன்றுமே மிருதங்கம் எப்படி வாசிக்கப் படவேண்டும் என்பதற்கு ஒரு 'டெமான்ஸ்ட்ரேஷன்'தான்: இந்த ஆண்டு 'டெமான்ஸ்ட்ரேஷன்' என்ற பெயரிலும் ஒன்றுசேர்ந்து கொண்டது'' என்றார் அவருடைய விசிறிகளுள் ஒருவர்.

தொகுப்பு: **சந்திரமௌலி, சாருகேசி, வாதூலன்**

''தனது மகன் படிக்கக் கூடாது என்று கருதுகிற எந்த ஒரு வார்த்தையையும் ஒரு எழுத்தாளன் எழுதக் கூடாது.''

—ரஸ்ஸல் லோவெல்

—சௌம்யா



## 24

அரசாங்க ஜீப்பில் இருவரையும் திரும்ப மணற்காட்டுக்கே அழைத்துச் சென்றார்கள்.

பின் சீட்டில் கிரிஜா வெற்றுப் பார்வை பார்த்துக் கொண்டு ஆடி ஆடிக்கொண்டு வர, முன் சீட்டில் உட்கார்ந்திருந்த இலியாஸ் ''இந்தம்மாவினால என்னெல்லாம் ஆயிருச்சு பார்த்தீங்களா? நடந்தது என்ன தெரியுமா கனகசபை?'' என்றார்.

''அதைத் தெரிஞ்சுக்கிறதினால இப்ப என்ன?'' என்றான்.

''ஞாபகம் பூராவும் திரும்பிருச்சில்ல அவுங்களுக்கு?''

''அப்படித்தான் நினைக்கிறேன்.''

''ராத்திரி நகையெல்லாம் போட்டுக்கிட்டுக் கிளம்பிப் போயிருக்காங்க. தென்னந்தோப்புக்குள்ள வச்சு அவங்க தாக்கியிருக்காங்க!''

''யாரு?''

''நல்ல வேளை. மீனவர்கள் இல்லை. இவங்களைத் தாக்கினவங்க நாகர்கோவிலுக்குப் பக்கத்திலே ரெண்டு ரௌடிப் பயலுவ. மண்டைல நல்லாப் போட்டுட்டு இருக்கிற நகைகளை எல்லாத்தையும் பிடுங்கிக்கிட்டுப் போயிட்டானுவ. அவங்களைச் செந்தூர்ல வெச்சுப் புடிச்சிட்டோம். கேஸ் பதிவு செய்திருக்கோம். செந்தூர்ல சாமி கும்பிட வந்தவங்க கிட்ட ஏதோ நகையைப்

# விடிவதற்குள் வா

பறிக்கப் பார்த்திருக்காங்க. அப்ப அகப்பட்டுக் கிட்டாங்க. நாலு தட்டுத் தட்டி விசாரிச்சதிலே இந்தம்மா கிட்டயும் அவங்கதான் கொள்ளை அடிச்சிருக்காங்கன்னு தெரிஞ்சது.''

''நகையெல்லாம் வெச்சிருக்காங்களா?''

''அது எங்க? அதை அப்பவே வித்துப் புட்டாங்க. அதை இந்நேரம் உருக்கியிருப்பாங்க. ஒரே ஒரு வளையல் மட்டும் கிட்டிச்சு. அதை நீங்க அடையாளம் காட்ட வேண்டி வரும். உயிரோட தப்பிச்சாங்களே அதுதான் பெரிசு. மண்டைல பட்ட அடியில இருந்து எழுந்தப்புறம் இவங்களுக்கு ஞாபகம் பிசகிப்போய் எங்கோ பஸ் ஏறி ஊர் ஊரா திரிஞ்சிருக்காங்க. டாக்டர் சொன்னார் அம்னிசியான்னு. இப்ப எல்லாம் சரியாப் போயிருச்சில்லே?''

''சரியாப் போயிருச்சு. எதுக்கு மணற்காட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போறீங்க?''

''அங்க ஒரு வழியா எல்லாரையும் சமாதானம் பண்ணி வெச்சிருக்கோம். கலெக்டர் மந்திரி எல்லாரும் வாராங்க. சாயங்காலம் சமாதானக் கூட்டம் இருக்கு. பாதிரியார் சதாசிவம், ரத்தினசாமி எல்லாரும் சேர்ந்தாற்போல் கூட்டத்தில கலந்துக்கறாங்க. மந்திரி முன்னிலையிலே பிரமாணம் எடுத்துக்கப் போறாங்க. அதில இந்தக் கலகத்துக்கு ஆதாரமான காரணமா இருந்த உங்க மனைவி கிடைச்சுட்ட செய்தியை அறிவிச்சு எல்லாம் சுமுகமா முடிக்கணும்னு எண்ணம்.''

''கலகம் நின்னு போயிருச்சுங்களா?''

''ரெண்டு நாளா அமைதியாத்தான் இருக்குது. இந்தக் கூட்டத்துக்கு அப்புறம் இன்னும் நிலைமை சுமுகமாயிரும்.''

மணற்காட்டை அடைந்தபோது அங்கும் இங்கும் போலீஸ்காரர்கள்தான் தென்பட்டனர். கனகசபையை அவர்கள் வீட்டில் இறக்கி விட்டார்கள். ''நீங்க போய் உள்ள இருங்க. சமயம் வர்றப்ப வண்டி அனுப்பறம்.''

''வா கிரிஜா'' என்றான். கிரிஜாவின் அம்மா அவளை அணைத்து அழைத்துக் கொண்டு உள் நுழைய கனகசபை பக்கத்து வீட்டைப் பார்த்தால் பூட்டுப் போட்டிருந்தது.

''பாரும்மா. இதான் உன் வீடு. ஞாபகம் இருக்குதில்லே?''

கிரிஜா தலையசைத்தாள். கிரிஜாவின் தாய் வீட்டைப் பெருக்கத் துவங்கினாள். கனகசபை வெளியே வந்து எதிர் வீட்டில் விசாரித்தான். ''தேவகி எங்கங்க?''

''அன்னைக்கே பூட்டிக்கிட்டுப் போயிட்டாங்களே?''

''தனியாவா?''

''இல்லையே. அவ அப்பா வந்திருந்தாரு. அவரையும் கூட்டிக்கிட்டுத்தான் போனா.''

''எங்க?''

''ஆஸ்பத்திரிக்குப் போயிட்டு அவங்க கிராமத்தைப் பார்க்கப் போறதாச் சொன்னாப்பல. நீங்க வந்தா இதைக் கொடுக்கும்படியா சொன்னா.''

அந்தக் கடிதத்தில் மலையாளத்தில் குழந்தைக் கிறுக்கல் போல் எழுதியிருந்தது. பைக்குள் போட்டுக் கொண்டு வீட்டுக்குத் திரும்பினான். அம்மாவும் மகளும் தரையில் உட்கார்ந்திருக்க கிரிஜா அவனைக் கண்டதும் ''சொல்லும்மா'' என்றாள்.

''கிரிஜா சொல்லுது சவுதியில வேலையை விட வேண்டாம்னு.''

''ஆமா. எங்கிட்டயும் சொன்னா!''

''நீங்க என்ன சொல்றீங்க?''

''நகை ஆசை உங்க மகளுக்கு விடலை.''

''இல்லீங்க. எல்லாத்தையும் இழந்ததில பிரமை பிடிச்சிருக்குது. நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். இவளை நீங்க கூட்டிக்கிட்டுப் போக முடியாதுங்களா?''

''பர்மிஷன் வாங்க நாளாகுமே.''

''பர்மிசன் கேட்டு மனுப் போட்டீங்களா?''

''எல்லாம் போட்டுத்தான் வச்சிருக்கு. அது கிடைச்சாக் கூட உங்க மக என்

கூட வர்ற நிலையில இருக்காங்கறீங்களா?''

''இடம் மாறினு செரியாப் போயிராது? என்னடி அவருக்குப் பர்மிசன் கிடைச்சா அங்க போவியா?''

''நான் வரலே. அவர் சம்பாதிச்சுட்டு வரட்டும்'' என்றாள் கிரிஜா.

''சம்பாதிக்கிறது முக்கியமாடி பெண்ணே உன் கணவன் முக்கியமில்லேயா?''

''உனக்குத் தெரியாதம்மா. இன்னும் ஒரு வருசத்திலே எல்லாத்தையும் மீட்டுக் கொடுக்கிற அளவுக்குச் சம்பாதிச்சுருவாரு. என்னங்க? எனக்கு எல்லா நகைங்களும் கிடைச்சிருமில்லே? இந்த முறை பவுனு வாங்கி வந்திருங்க. இங்க நகை செஞ்சு



போட்டுக்கிறேன்!''

கனகசபை தாயைப் பார்க்க, அவன் சோகத்துடன் ''எதுக்குத்தான் இந்தப் பைத்தியமோ உனக்கு?'' என்றான். ''மாப்பிள்ளே, எனக்கு ஒரு விசயத்தில வயித்தில பால வாத்தாப்பல இருந்திச்சு! இந்தப் பொண்ணுக்கு விபரீதம் ஏதும் ஆயிரலேன்னு தெரிஞ்சப்புறம் எப்படி ஆறுதலா இருந்திச்சு தெரியுமா? இருக்கிற அம்மனுக்கு எல்லாம்வேண்டிக்கிட்டேன். பொண்ணு உயிர் தப்பிச்சது. ஏதும் விபரீதம் நேராம உயிர் தப்பிச்சது! புண்ணியம் பண்ணியிருக்கணும்! ஒரு வருசம் என்ன ரெண்டு வருசம் இவளைப் போத்திப் பாதுகாக்கறேன். இந்த ஊர்ல விட்டுட்டுப் போக வேண்டாம். நாகர்கோயிலுக்கு அழைச்சுட்டுப் போயிடறேன். நீங்க கொஞ்சம் பல்லைக் கடிச்சுக்கிட்டுப் பணம் சேர்த்துக்கிட்டு...''

''அதுக்கென்ன செய்துட்டாப் போச்சு நீங்க உங்க மகளை வெச்சுக்கங்க'' என்றான். பையில் கடிதத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டான். ''கிரிஜா! மூஞ்சி கழுவிட்டு ரெடியா இரு. அவங்கல்லாம் வருவாங்க.''

கூட்டம் பஞ்சாயத்து அலுவலகத்தில் நிகழ்ந்தது. கலகத்தின் சமீபத்தை நினைவு படுத்தும் வகையில் சன்னல்களில் கண்ணாடி எல்லாம் பெயர்ந்து சுவரில் பெஞ்சுகள்எரிந்து போனதின் கரி பரவியிருந்தது. வாசலில் கார்களும் ஜீப்புகளும் நின்றன.

''என்னங்க, பத்திரிகை, போட்டோக்காரங்க எல்லாரும் வந்துட்டாங்களா?''

''வாங்கம்மா வாங்க'' என்று கிரிஜாவை கலெக்டர் அழைத்துத் தனியாகப்பின் வரிசையில் நாற்காலி போட்டு உட்காரவைத்தார். பேச்சுவார்த்தைகள்நடந்துகொண்டிருந்தன. பகங்குளம் உயர்நிலைப் பள்ளியில் தங்கியிருக்கும் எண்ணூறு இந்துக்களுக்கு அரிசி விநியோகம் செய்வது பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். மந்திரி பாதிரியாரைப் பார்க்க அவர் ''இந்த வேலையை நாங்க எடுத்து நடத்துறோம்'' என்றார்.

''சபாஷ்! தட்ஸ் தி ஸ்பிரிட்'' என்றார் கலெக்டர். ''இதுக்கு நேரா இந்துக்கள் ஏதாவது செய்தா நல்லா இருக்கும். என்ன சொல்றீங்க கனகசபை?''

''கன்னியா குமரியிலிருந்து கொல்லங்கோடு வரையில் உள்ள கிறிஸ்துவ மீனவர்கள் பகுதிகள்ள போய்ச் சேதமான குடிசைகளை எல்லாம் திருப்பிக் கட்டித் தர்றோம்'' என்றார் கனகசபை.

''பிரமாதம். இதுல்ல ஒத்துமை. இந்தக் குணமெல்லாம் எங்க போச்சு?''

''கோயில் மணி அடிச்சப்புறம் ஆயிரக் கணக்கில் அவங்க கூட்டம் கூடற வழக்கத்தை ஒழிக்கச் சொல்லுங்க'' என்றான் ரத்னசாமி.

''அதே மாதிரி பாட்டுப் போடறதையும் கவனிக்கச் சொல்லுங்க.''

''இத பாருங்க இப்படி வச்சுக்கலாம். காலை பாட்டுப் போடறதை ஒரு மாத காலத்துக்குச் சமாதானம் முழுக்க நிலவற வரைக்கும் ரெண்டு கட்சிங்களும் நிறுத்திரலாம். என்ன சொல்றீங்க?''

''மணி அடிக்கிறது?''

''அதையும் கொஞ்ச நாளைக்கு நிறுத்தி வெச்சிரலாமே?''

''சம்மதந்தானே?''

''ஜோதின்னு ஒருத்தர் இந்துக்களுக்கு ஆறுதல் சொல்லிக்கிட்டு ஊர் ஊரா போய்க்கிட்டு இருந்தார். அவரைக் கைது பண்ணி வெச்சிருக்காங்க. பெயில் கூட அனுமதிக்காம. உடனே அவரை விடுதலைசெய்யணும்.''

மந்திரி கலெக்டரைப் பார்க்க, அவர் போலீஸ் அதிகாரியைப் பார்க்க, ''ஸார் அந்தாளு வன்முறை...''

''வன்முறை 'யெல்லாம் ஆயிருச்சுங்க! சொன்னதைக் கேளுங்க. அவரை உடனே விடுதலை பண்ணுங்க.''

''மணலி சங்சன்ல பிள்ளையார் கோவிலைத் தீவைத்துக் கொளுத்தியிருக்காங்க. அதைப் புதுப்பிக்க உடனே பணம் சாங்ஷன் பண்ண ணும்.''

''அது போல எங்க கட்சில பேபின்னு ஒருத்தனை உள்ள தள்ளியிருக்காங்க. அவனை விடுதலை பண்ணணும்.''

''அதையும் செஞ்சுரவேண்டியதுதானே?''

''குஞ்சு, கண்ணன், காந்தாமணி இவங்க வூட்டுல எல்லாம் கிறிஸ்தவங்க புகுந்து சேதம் விளைச்சதுக்கு ...''

''அது போல பெர்ணுண்டோ சாத்தப் பன்னு எங்க கட்சியில...''

''எல்லாத்தையும் லிஸ்ட் போட்டுக் குடுத் துருங்க. கவனிச்சுரலாம். போட்டோக் காரங்க வந்தாங்களா, எங்கய்யா?''

''அமைச்சர் இட்ட முக்கியமா ஒண்ணு கேட்டுக்கணுங்க.''

''சொல்லுங்க! மத்ததெல்லாம் முக்கிய மில்லேங்கிறீங்களா?'' என்றுசிரித்தார் அமைச் சர்.

''இங்க எஸ்.பி., டி.எஸ்.பி., ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர், எஸ்.ஐ. எல்லார் பேரையும் பாருங்க! அத்தனையும் கிறிஸ்தவங்க! அப் புறம் கிராமத்துக்கு இருந்த பேரை யெல்லாம் பிலிப்ஸ்புரம், ரீத்தாபுரம் செயின் பால்ஸ் நகர்னு மாத்தி மாத்திப் பிர சாரம் செய்யறது உடனே நின்னு போக ணும்.''

நாகர்கோயிலே நாதர் கோயிலாயும் கன் னியாகுமரியைக் கன்னி மேரிங்கறுங்க!''

மந்திரி சிரித்தார்.''ஏங்க அப்படிங்களா?''

''ரெண்டு கட்சியிலும் ஃப்ளுட்டிக்ஸ்இருக் காங்க.''

''பாருங்க. கோரிக்கை எல்லாத்தையும் எழுதியிருக்கம். இதை நீங்க அவங்களுக்குப் படிச்சுக் காட்டிட்டு அரசாங்கத்திடமிருந்து உத்தரவாதமா இந்தக் கோரிக்கைகள் நிறை வேற்றப்படும்னு உறுதிமொழி வேணும்'' என்றார் சதாசிவம்.

மந்திரி அதை வாங்கி ''ஐயப்பா மொத் தம் முப்பத்து மூணு கோரிக்கை'' என்றார்.

''உங்க பக்கம் எவ்வளவுங்ககோரிக்கை?''

''அதும் இருக்குங்க ஒரு முப்பது.'' மந்திரி அதைத் தம் பி.ஏ.விடம் கொடுத்தார். ''இரண்டு கோரிக்கைகளையும் படிச்சுப் பார்த் துட்டு அரசு ஆவன செய்யும். இப்ப நமக்கு வேண்டியது சமாதானம்! கலகத்தில் காணு மப்போன இந்துக்களுக்கு கிறிஸ்துவங்களுக்கு எல்லாம் தலா ஐயாயிரம் ரூபா கொடுக் கிறதா அரசு முடிவு செய்திருக்கு. முதல்ல பாதிரியாரும் சதாசிவம்,கனகசபை, ரத்தின சாமி எல்லாரும் வாங்க. எல்லாரும் கை குலுக்குங்க. போட்டோ எடுய்யா! அப் புறம் இந்த அம்மாவை புருசன் கூடப் போட்டோ எடுத்துப் பெரிசாப் போடுங்க! இவங்க காணமப் போயித்தானே ரகளையே ஆரம்பிச்சது. காவல் துறையின் அயராத முயற்சியினால் கண்டு பிடிச்சுட்டாங்க. இனி இந்தக் கிராமத்திலே நாம பார்க்க வேண் டியது சுபிட்சமும் செழிப்பும்தான்... இரு பது அம்சத் திட்டமும்தான்.''

பளிச் பளிச்சென்று போட்டோ பிடிக்கும் போது கனகசபை தன் அருகில் உட்கார்ந் திருந்தவரிடம் ''உங்களுக்கு மலையாளம் படிக்க வருமா?'' என்றான்.

''தெரியும். ஏன்?''

''இதில என்ன எழுதியிருக்கு படிச்சுச் சொல்லுங்களேன்.''

''ரெண்டு பேரும் குளோஸா நில்லுங்க கனகசபை!''




அவர் அதைப் பார்த்துவிட்டு ''உடனே வளப்பாடு வரணும் தேவகின்னு எழுதி யிருக்கு'' என்றார்.

''வளப்பாடா அது எங்க இருக்குங்க?''

''இங்கருந்து நாப்பது மைல் இருக்கும்.''

''கனகசபை வாங்க!''

கிரிஜாவின் அருகில் நின்று போட்டோ எடுத்துக் கொண்டபோது கனகசபைக்கு இதுதான் அவளுடன் தான் ஒன்று சேர்ந்து இருக்கப் போகும் கடைசிச் சந்தர்ப்பம் என்று தோன்றியது. (தொடரும்)

நீங்கள்

# கேட்டவை

# தராசு

வாகும் என்றார். ரூ. 1250 என்று பதில் கிடைத்ததும் அவருக்குப் பகீரென்றது. என் நாட்டிலேயே இன்னும் குறைவான கூலி கொடுத்துத் தைத்துக் கொள்கிறேன் என்று கிளம்பி விட்டார். ஐந்து நட்சத்திர ஓட்டல் எதிரே உள்ள குடிசைத் தொழில் விற்பனை நிலையத்தில் தந்தத்தாலான பேப்பர் கட்டர் விலைக்குக் கேட்டார். தந்தத்தின் விலைக்கு வெறும் எலும்பினாலான பேப்பர் கட்டர் தரப்பட்டபோது அந்த மோசடி யிலும் சிக்காமல் தப்பினார். இப்படி அயல் நாட்டவருக்குத் தமிழகத்தின் மீது வெறுப்பு உண்டாக்குபவர்களை எண்ணித் தலை குனியாமல் என்ன செய்ய?

✖ எம். சம்பத், வேலாயுதம் பாளையம்

வருவாய் அடிப்படையில் இட ஒதுக்கீடு என்று எம். ஜி. ஆர் மறுபடியும் ஆரம்பித்திருக்கிறாரே?

! யாதவர்கள் ஆயிற்று. இப்போது முஸ்லீம்களும் தங்களைப் பிற்பட்டோராகக் கருத வேண்டும் என்று இயக்கம் ஆரம்பித்து விட்டார்கள். எதற்கு வம்பு? இப்படி ஒரு ஏற்பாடு செய்து விட்டால் எல்லோருக்கும் நிம்மதி. (1) பிற்படுத்தப்பட்டோருக்கு 25 சதம் (2) முற்படுத்தப்பட்டோருக்கு 25 சதம் (3) பொரிக்கு 25 சதம் (4) வருமான வரி செலுத்தாதவர்களுக்கு 25 சதம் (5) தகுதி, திறமை உள்ளவர்களுக்கு சைபர் சதம்!

✖ ராஜி ராதா, திருச்சி.

? இந்திய கிரிக்கெட் அணியுடன் மோத ஜாகிர் அப்பாஸும் இம்ரான்கானும் போதும் போலிருக்கே?

! காப்டன் இம்ரான் கான் தன்னம்பிக்கையுடன் இந்தியர்களை பேட்டிங் செய்ய அனுப்பினார், இரண்டாவது டெஸ்ட்டில். அந்த சாணக்கியம் பலன் தந்தது. அவரது அசுர வேக வீச்சுக்கு கராச்சிக் காற்றும் துணை செய்தது. வேகப் பந்து வீச்சுக்கு நமது பாட்ஸ்மென்கள் திணறுவார்கள். எதிர்பார்த்ததுதான். ஆனால் முதல் இன்னிங்ஸில் அப்துல் காதரின் ஸ்பின்னையும் சந்திக்க முடியாது சுருண்டது அந்தோ பரிதாபம். அடுத்த டெஸ்ட் தொடரிலாவது தொப்பை போட்டவர்களை வீட்டுக்கு அனுப்பி இளம் இரத்தங்களைச் சேர்த்துக்கொள்ளட்டும் தேர்வாளர்கள்.

✖ பி. ஆர். பார்த்தசாரதி, மன்னார்குடி ★

? இலங்கை மக்கள் தீர்ப்பில் பெரிய வித்தியாசமிருக்கிறதா?

! 83ல் நடக்க வேண்டிய தேர்தலில் தம் கட்சி இப்போதுள்ள பலத்தை நாடாளு மன்றத்தில் மீண்டும் பெறாது என்று கண்டு கொண்ட ஜெயவர்த்தன இன்றுள்ள நாடாளு மன்றமே மேலும் ஆறு ஆண்டுகள் நீடிக்க அபிப்பிராய வாக்கெடுப்பு நடத்தி வெற்றி கண்டார். மேலெழுந்தவாரியாக இது ஜனநாயகமாகத் தோன்றும். ஆனால்... ஒரு எமர்ஜென்ஸியை அறிவித்து அபிப்பிராயத்தேர்தலை நடத்தியதும் எதிர்க் கட்சியினர் பலர் இந்த வாக்கெடுப்பின் போது சிறையில் இருந்ததும், சட்ட ஒழுங்கை நிலைநாட்டவென்று பல இடங்களில் ராணுவத்தை நிறுத்தியதும் ஜெயவர்த்தனவுக்குப் பெருமை தரவில்லை. அவருக்குச் சாதகமாக இப்போது கிடைத்தது 54.7 சதம் வோட்டுதான். ஆனால் நாடாளு மன்றத்தில் இன்று அவர் கட்சியின் பலம் 83 சதம் என்பதைப் பார்க்கையில் அபிப்பிராய வாக்கெடுப்பில் உள்ள அநீதி புரியும். மேலும் தமிழ்ப் பிரதேசங்களில் அவருக்கு ஆதரவு குறைவதும் இந்த வாக்கெடுப்பில் தெரிய வருகிறது. எனவே அவர் தமிழர்களின் நியாயமான கோரிக்கைகளுக்குச் செவிசாய்க்கப் பேச்சு வார்த்தை தொடங்குவது அவசர அவசியமாகிறது.

✖ ஏந்தல் ஆர் இளங்கோ. திருச்சி

? வேதனைக்குரிய விஷயம் எது?

! சிருங்கேரி சங்கராச்சாரியாரும், துவாரகா சங்கராச்சாரியாரும் எல்லாருக்கும் ஆசி வழங்குவது போல் பிரதமருக்கும் ஆசி கூறியிருந்தால் தவறில்லை. ஆனால் 'பிரதமர் கரத்தைப் பலப்படுத்துங்கள்' என்று தேர்தல் சமயத்தில் அரசியலில் நேரடியாக ஈடுபடுவது வேதனைதான்.

✖ எஸ். ரவீந்தர், ரூப்புசி பாளையம்

? ஏஷியாடில் பலகோடி ரூபாய் லஞ்சம் ... நடந்திருக்கிறது என்கிறேன். ஒப்புக்... கிறீர்களா?

! தாராளமாக. அதுமட்டுமில்லை, ஏஷியாட் முடிந்த பிறகும் தண்டச்செலவு தொடர்கிறது. நேரு ஸ்டேடியத்தைப் பராமரிக்க மட்டும் ஒரு நாளைக்கு ரூ. 9,000 மக்களின் வரிப் பணம் செலவாகிறது. விளையாட்டு நடந்தால் ஒரு நாளைக்கு ரூ. 20,000 செலவாகும். இப்படியே பல ஸ்டேடியங்களுக்கும் கணக்குப் போட்டால் விளையாட்டு நடக்காதபோதே மக்கள் பணம் எவ்வளவு கரையும் என்று புரிந்துகொள்ளலாம். விளையாட்டுக்கள் அடிக்கடி நடக்கும் என்றும் தோன்றவில்லை. காரணம், இந்திரப்ரஸ்தா ஸ்டேடியத்துக்கு வாடகை ஒரு நாளைக்கு ரூ. 16,000! யாரால் இவ்வளவு தொகை தந்து விளையாட்டுக்களை நடத்த முடியும்?

★ ரூ. 10 பரிசு பெறுபவர்

பி. ஆர். பார்த்தசாரதி

33, ஹரித்திரா நதி தெற்கு வீதி,

மன்னார்குடி (தஞ்சை மாவ)

# அந்தி மயக்கங்கள்

முத்துக்கிருஷ்ணனுக்கு அப்பாடா என்றிருந்தது. மூத்த பெண் விஜயத்தைக் கல்யாணம் செய்து கொடுத்தாகி விட்டது. யார் கையையோ காலையோ பிடித்துப் பிள்ளை வாசுவை அண்ணாமலை யுனிவர்ஸிடியில் பி.ஈ. சேர்த்தாயிற்று. இனிமேல் என்ன பொறுப்பு? ஒன்றும் இல்லை.

''அப்பா!...இனிமேல் 'கேர் ஃப்ரீ மேன். ஒருவித ரெஸ்பான்ஸிபிலிட்டியும் இல்லை'' என்று நண்பன் வேதகிரியிடம் சொன்னார். வேதகிரியும் அவரும் ஒரே அலுவலகத்தில் சேர்ந்து வேலை பார்ப்பவர்கள். அவனுக்கு நாலைந்து வயது குறைவாக இருக்குமோ என்னவோ?

''பொறுப்பு இல்லையாவது? மாப்பிள்ளை பெண்ணை நன்றாக வைத்துக் கொள்ளணும். தாத்தா ஆகணும்....''

முத்துக்கிருஷ்ணன் முகத்தில் இலேசாக நாணம் படர்ந்தது. அதுவும் வரலாம். (நேற்றுத்தான் காயத்ரி சொன்னாள் வெட்கத்துடன். 'விஜயத்துக்குப் பொய்யோமெய்யோவென்று இருக்கு!')

''வெரி குட்! வெரி குட்.... இனிமேல் என்ன? ஃப்ரீ பார்ட். வாழ்க்கையை உற்சாகமாக அனுபவிக்கலாமே!'' வேதகிரி திரும்பினார். ''மூர்த்தி இப்படி வா. சாருக்கு எப்படி அனுபவிப்பது என்று சொல்லேன்!''

மூர்த்தி அந்தப் பேச்சில் கலந்து கொண்டான். கை குலுக்கினான். ''எம். கே. சார் லைஃபிலே எவ்வளவோ இருக்கு! சும்மா வீடு ஆபீஸ் இரண்டையும் தவிர உங்களுக்கு வேறு என்ன தெரியும்? ஒரு கிளப், டிரிங்க்ஸ், காபரே?'' — உடலைக் குலுக்கினான். ''ஓகாட் எவ்வளவு இருக்கு வாழ்க்கையில்!''

''சே! சேச்சே!'' என்று முத்துக்கிருஷ்ணன் மறுத்துப் பார்த்தார். ஆனால் அந்த மறுப்பில் போலித்தனம் இருந்தது. உள்ளூர சபலம் தட்டியது. இதை மூர்த்தி ரொம்ப வருஷத்துக்கு முன்னால் சிவாஸ் ரீகல் விஸ்கியை மெல்ல ருசி பார்த்ததைக் கதையாகச் சொல்லி இருக்கிறான். ''ஐயோ! வேண்டாம்! வேண்டாம்!'' என்று அவர் காத தூரம் ஓடியிருக்கிறார். உடம்பு கெட்டுவிடும் குடும்பம் நாசம் ஆகிவிடும்; பணம் போய்விடும்— போன்ற அச்சங்கள் தான் காரணம்.

இப்போது? அத்தகைய எந்தக் காரணமும் வலுவானதாக இல்லை. பிள்ளைக்கும் பெண்ணுக்கும் வழி ஏற்படுத்திக் கொடுத்தாகி விட்டது. இனிமேல் மகளே, மகனே, உன் சமர்த்து. 'ஹெல்த் என்ன ஹெல்த் மண்ணாங்கட்டி...ஐம்பது வயதுதாண்டியாகி விட்டது. இனி என்ன?'

முத்துகிருஷ்ணனுக்கு எந்த ஓட்டல் என்று ஞாபகம் இல்லை. அரை இருட்டு. மெல்லிய வெளிச்சமும், தம் மாரோ தம் என்ற பழைய பாட்டும் அவருக்குப் போதை ஊட்டின.

இந்தப் பக்கம் வேதகிரி, அந்தப் பக்கம் மூர்த்தி. முத்து கிருஷ்ணன் ஒரு விதமான கூச்சத்தை உணர்ந்தார். முதன் முதலாக ஓர் 'ஏ' படம் பார்க்கச் செல்லும் மீசை வராத சின்னப் பையனைப் போல.

வித விதமான வகைகள் மெதுவாக வந்தன. வேதகிரிக்கு அந்தக் கிளப் ரொம்பப் பழக்கம் போலும். ''ஓய் வாதிராஜ்! 'பாக்கியும் கொண்டாடா! கையெழுத்துப் போடறேன்'' என்று அட்டகாசமாக, உரிமையுடன் ஏவல் இட்டு அதட்டிக் கொண்டிருந்தான்.



டிரிங்க்ஸ் வந்தது.

''எனக்கு ஆப்பிள் ஜூஸ் போதுமே!'' என்று சொன்னார் முத்துக்கிருஷ்ணன் மெதுவாக.

மெல்....ல ருசி பார்த்தார். தொண்டைக் குழியில் இறங்கியபோது லேசாக எரிவது போன்ற உணர்ச்சி தோன்றியதே தவிர அப்புறம் லேசானது போல் உணர்ந்தார். ஒரு பெக்... ரெண்டு பெக்... மெதுவாக—

''தொட்டுக்கொள்ள எடுத்துக்கங்கசார்!''

வறுத்த முந்திரிப் பருப்பு; சிப்ஸ்; கார வேர்க்கடலை. அன்னாசிப் பழத்துடன் சீஸ்!

தாம் இன்னமும் நிதானத்தில்தான் இருக்கிறோம் என்கிற எண்ணமே அவருக்குத் தன்னம்பிக்கை ஏற்படுத்தியது. சினிமாவில் வருவது மாதிரி ஒரு கிளாஸ் குடித்ததுமே கண்டபடி உளறுவோம் என்று நினைத்தது எத்தனை தவறு!

''ஏய்சாருக்குஇன்னொருகிளாஸ் ஊற்று!''

கிளாஸில் திரவம் நிரம்பியது. தொடர்ந்து தொட்டுக்கொள்ள ரஜ, கத, துரக, பதாதிகள்!

''முத்துக்கிருஷ்ணன் சார்! இது ஒரு பெண்ணை அனுபவிப்பது மாதிரி! மெள்ள, நிதானமாகச் செயல்பட்டு அனுபவிக்கணும். அது ஒரு தப்பா? இல்லையே! எதுவுமே தப்பு இல்லை. 'லிமி'ட்டில் இருந்தால்'' என்று வேதகிரி வியாக்கியானம் செய்தான்.

பார்ட்டி முடிந்தபோது மணி பதினொன்று. ''ஏய்! பார்டா சார் இன்னும்ஸ்டெடியா இருக்கார். மனுஷன் படா ஆள்டா.''

''முன்னாலேயே பழக்கம் இருக்கும்பா. டூப் அடிச்சிருப்பார்.''

''நோநோ...இதுதான் முதல் தடவை'' உள்ளுக்குள் அவருக்குப் பெருமையாக



இருந்தது. ஏதோ ஒரு போட்டியில் வென்று விட்ட மாதிரியான உவகை அவரை ஆட்கொண்டது. வீட்டில் ஸ்டைலாக வந்து இறங்கினார். காயத்ரி தூக்கக் கலக்கத்துடன் கதவைத் திறந்ததால் எதுவுமே கேட்கவில்லை.

அன்று முதல் முத்துக்கிருஷ்ணன் போக்கு மாறியது. சனி இரவென்றால் பார்ட்டி — காக்டெயில் — என அவர் டயரியில் குறித்தாகி விட்டது. நிதானம் இழக்காமல் ஒவ்வொரு வாரத்தையும் தாண்டிக்கொண்டிருந்தார்.

''ஏண்டா இரி! சார்தான் தேர்ந்து விட்டாரே! சின்ன காபரே டான்ஸ'க்குக் கூட்டிக் கொண்டு போனாலென்ன?''

''சேசே! அது ரொம்பத் தப்புப்பா.''

''என்ன தப்பு? யூ ஸீ எம். கே. சார். 'லைபி'லே அனுபவிக்க நிறைய இருக்கு. இவ்வளவு நாள் டிரிங்க்ஸ் சாப்பிடலீங்களே. என்ன ஆச்சு? கூடக் கொஞ்சம் செலவு ஆகியிருக்கும். தட்ஸ் ஆல்! பெண்டாட்டிக்கு ஒரு புதுப் புடவை எடுத்த மாதிரி!''

''கூட்டிக்கிட்டுப் போக வேண்டியதுதான். சார் மண்டையை ஆட்டறாரே!''

இந்த அனுபவம் சற்று வேறு விதமாக இருந்தது! இதுவும் ஓர் ஓட்டலில். ஆனால் பிரபலம் ஆகாதது. கூட்டம் நிரம்பி வழிந்தது. ஏதோ தெய்வ சந்நிதிக்குக் காத்துக் கொண்டிருக்கிற மாதிரி ஜனங்கள் காத்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் முகத்தில் தெரிந்த ஆவல்!

வேதகிரிக்கு இந்த இடமும் பழக்கம் தான் போலிருக்கிறது! ''யார் இன்னிக்கு? அட மஞ்சு... குட்டி படா ஷோக்குடா!''

முத்துக்கிருஷ்ணன் நாலாபுறமும் பார்த்துக்கொண்டே சிறிது தயக்கத்துடனே அமர்ந்தார். தெரிந்தவர்கள் யாராவது இருக்கிறார்களோ என்று கவனித்தார். நல்ல காலம் இல்லை. திடீரென்று விளக்கு அணைந்தது.

**யோசிக்க வேண்டாமா?**

கார்த்திகை அன்று, எங்கள் வங்கியில் வேலைசெய்யும் பெண்கள், மாலையில் விளக்கேற்றுவதற்காக வீட்டிற்குச் சீக்கிரம் செல்ல அனுமதி கோரி எங்கள் அதிகாரிக்கு எழுதிக் கேட்டிருந்தோம். கையெழுத்துப் போட்டிருந்ததில் ஓர் இளம் விதவையும் இருந்தார். எங்கள் அதிகாரி அந்தப் பெண்ணைக் கூப்பிட்டு 'மற்றவர்கள் எல்லோரும் விளக்குஏற்ற வீட்டிற்குப் போகிறார்கள். நீ என்ன செய்யப்போகிறாய் வீட்டிற்குப் போய்?' என்று குதர்க்கமாகக் கேட்டதும் பாவம் அந்தப் பெண் அழுதுவிட்டார். தன் மகளை விளக்கேற்றச் சொல்லிப் பார்த்து மகிழ நினைத்த அந்தத் தாயின் மனம் எவ்வளவு நொந்திருக்கும்?

—கலாமூர்த்தி

மஞ்சுவோ — என்ன பெயரோ — மேடையில் ஒசிந்து குலுங்கி ஆடினாள் — அங்கம் எல்லாம் தெளிவாகத் தெரியும்படி. சில நிமிடம் கழித்துச் சடசடவென்று மேடையிலிருந்து இறங்கிப் பார்வையாளர்களை நெருங்கி வந்தாள்.

முத்துகிருஷ்ணனுக்கு உடல் நடுங்கியது.

அவன் வேதகிரியிடம் ''என்ன சார் புதுசா?'' என்றார்.

''பழசு. ஐம்பது வயசு ஆச்சு. ஆனா இதுக்குப் புதுசு!''

''வெல்கம்!'' அவள் மூச்சுக் காற்று வாசனையுடன் உஷ்ணமாகப் படர்ந்தது.

முத்துகிருஷ்ணன் நிலை தடுமாறினார்.

மறுபடியும் மேடைக்குப் போய் ஆடினாள். சட்டென்று ஸ்விட்ச் அணைந்தது. உள்ளே ஓடிவிட்டாள்.

ஒரே கூச்சல்.

முத்துகிருஷ்ணனுக்கு வேடிக்கையாக இருந்தது. மேடையில் கண்ட காட்சியை விட இப்போது காதில் விழுந்த பேச்சுக்கள்தான் இன்னும் அதிக வெறியை ஊட்டியது. கிறு கிறுவென்றிருந்தது. காலோடு—தலை வெறி.

வீட்டுக்கு வந்தார். கதவைத் திறந்த காயத்ரியை அப்படியே தள்ளிக்கொண்டு முன் அறைக்குப் போனார். இறுக அணைத்து முத்தம் இட்டார்.

''என்ன இது!'' என்று அவள் விடுவித்துக் கொண்டாள்.

முத்துகிருஷ்ணனும் சடாரென்று பின்வாங்கினார். காயத்ரி இணங்காதது மட்டுமல்ல இவள் பழைய காயத்ரி இல்லை. என்னவோ ஒரு புது வாசனை... உதட்டில் கூட ஏதோ ஒரு சாயம். என்ன ஆயிற்று காயத்ரிக்கு?

முந்திய தினம் தனக்கு உதித்த சந்தேகம் மேலும் ஊர்ஜிதமாகியது. அதற்கு ஏற்றாற் போல் காயத்ரி நடந்து கொண்டாள். அடிக்கடி வெளியே போனாள். உடையும் முன் போல இல்லை. சிறிது மாடர்னாகத் தலையைத் தளர்த்தி விட்டுக் கொண்டு — சில வேளைகளில் செண்ட் மணம் கூட.

''என்ன காயத்ரி இது! ரொம்ப மாறி விட்டாயே?'' என்று ஒரு சமயம் கேட்டுப் பார்த்தார்.

''நானா! நீங்கள்தான்! கண்ட நேரங்களில் வருவது, போவது!'' என்றாள் காயத்ரி வெடுக்கென்று.

முத்துகிருஷ்ணன் மேலே கேட்கவில்லை. கம்மென்று இருந்துவிட்டார். திடீரென்று அவருக்குப் புதிய சந்தேகம் எழுந்தது. வயசான காலத்தில் தனக்கு வக்கிரமான ரசிப்பில் ஈடுபாடு ஏற்பட்டது போல காயத்ரிக்கும் புத்தி திரும்பி விட்டதோ? போன வாரம் ஓர் ஆங்கிலப் பத்திரிகையில் படித்தது ஞாபகத்துக்கு வந்தது. மெனோபாஸ் சமயத்தில் பெண்களுக்கு அதிக ஆசை பிறக்குமாம். ஒருவேளை தன்னால் அதற்கு ஈடு கொடுக்க முடியவில்லையோ?

சட். என்ன பைத்தியக்காரத்தனமான எண்ணம் என்று தோன்றினாலும் மனசின் ஒரு மூலையில் அரித்துக் கொண்டிருந்தது.

மறு...மறு...இதை மறக்க வேண்டும். மறப்பதற்கு ஒரே வழி... விஸ்கி. வாரம் ஒரு நாள் என்பது இரண்டாக மாறியது.

அவரால் தொடர்ந்து கவலைப்பட முடிய வில்லை. வாசு 'லீவு'க்காகச் சிதம்பரத்தி லிருந்து வந்தான்.

**வா**சுவைக் கண்டு முத்துகிருஷ்ணன் அதி சயித்துப் போனார்.

''என்னம்மா? ரொம்ப மாறிப்போய்விட் டாயே? அப்பாதான் பழையபடியே இருக் கார்'' என்றான் வாசு.

முத்துகிருஷ்ணனுக்குச் சுருக்கென்றது. தெரிந்துதான் சொல்கிறானா அல்லது தெரி யாமலா?

''போடா! அப்படியேதான் இருக்கேன்'' என்று காயத்ரி மழுப்பினாள்.

''டேய் வாசு! துருவிக் கேளுடா! என் னவோ மறைக்கிறான்'' என்று சொல்ல வேண்டும்போல் முத்துகிருஷ்ணனுக்குத் துறு துறுத்தது.

சனி இரவு அவர் சற்றுச் சீக்கிரமே வீட் டுக்கு வந்தார். 'காட்சி'யில் நிறைய நேரம் தங்கவில்லை.

''என்னப்பா சீக்கிரம் திரும்பிவிட் டீர்கள்?'' என்றான் வாசு.

''அம்மா இல்லை?'' முத்துகிருஷ்ணனுக்கு ஆச்சரியம்.

''வெளியே போயிருக்கிறாள். வர லேட் டாகுமாம்.''

அப்போதுதான் கவனித்தார். வாசுவை. கையில் ஒரு மாத்திரை போலத் தெரிந்தது. சட்டென்று போட்டுத் தண்ணீர் குடித்தான்.

''என்னடா அது?''

''அதுவா? ஒரு வைட்டமின்.'' அசிரத்தை யாகச் சொல்லிவிட்டு வாசு ஏதோ ஒரு புத்தகத்தில் மூழ்கினான்.

வைத்த கண் எடுக்காது பிள்ளையைப் பார்த்துக் கொண்டிருந்தார் முத்துகிருஷ் ணன். நிச்சயம் போதை மாத்திரைதான். கடவுளே! இது எதில் கொண்டு போய் விடுமோ! இதற்கு அடிமையானால் மீளுவது கடினம் என்று சொல்கிறார்களே?

'ஒழுக்கத்தைப் பற்றிக் கேட்க உனக்கு என்ன உரிமை?' என்று மனத்தில் ஒரு குரல் கேட்டது. 'எனக்கென்ன? வயதாகிவிட்டது. படிக்க வேண்டிய பையன் கெட்டுப் போகி றானே!' என்று இன்னொரு குரல் பதிலளித் தது.

**அ**ன்று மாசத்தின் முதல் சனிக்கிழமை. முத்துக்கிருஷ்ணன் கிளப்பிலிருந்து திரும் பினார். வாசற் கதவு தாழ்ப்பாள் இடப்பட வில்லை. திறந்தார். முன் அறையிலிருந்து பேச்சுக் குரல் கேட்டது.

''சொல்லேன் அம்மா.''

''வேண்டாம்டா. உன் அப்பாவுக்கு இதெல்லாம் பிடிக்காது.''

''அதெல்லாம் அந்தக் காலம். இப்பத் தான் காலம் மாறி வருகிறதே!''

'' ம்...'' என்றார் முத்துகிருஷ்ணன். மனைவியும் பிள்ளையும் திரும்பினார்கள். திடுக்கிட்டதாகத் தெரியவில்லை.




இந்தியாவில் எப்படி வேலை நடக் கிறது என்பதைபால்கிவாலாகூறுகிறார்: ''இந்தியாவின் ஒரு பாதி எப்போதும் ஸ்டிரைக்கில் இருக்கிறது. மற்றொரு பாதி எப்போதும் ஓவர்டைம் செய்து கொண்டிருக்கிறது!''
(டைம்ஸ் ஆஃப் இந்தியா) —ரா. வெங்கு

''அம்மா வந்துப்பா—'' என்று வாசு ஆரம் பித்தான்.

''அவள்தான் மாடர்னாக டிரஸ் செய்து கொண்டு ஊர் சுற்றுகிறாளே!''

''அதேதான். கரெக்ட்'' என்றாள் காயத்ரி. ''இனிமேல இன்னும் அதிகமாகச் சுற்றணும். என்னை டிரினிடி லேடீஸ் கிளப்பில் செக் ரட்டரியாகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அந்தப் பதவிக்குத்தான் மேக்கப் எல்லாம்.''

பிரமித்துப் போய் நின்றார் முத்துகிருஷ் ணன். இதுதானா காயத்ரியின் போக்குக்குக் காரணம்? என்னவெல்லாமோ எண்ணிக் குழப்பிக் கொண்டு விட்டோமே? சே...

ஒரு சந்தேகம் நீங்கியது. இன்னொன்று? ரகசியமாக வாசுவைக் கூப்பிட்டார். ''நீ என்ன பண்ணினாலும் தப்புச் சொல்லப் போறதில்லை. அதென்ன மாத்திரை? வேலி யமா?''

''அது தூக்க மாத்திரையோ போதை மாத்திரையோ இல்லை. ஞாபக சக்தி மாத் திரை. நிறையப் படிக்க வேண்டியிருக்கு. ஒரு சினேகிதன் சொல்லி இதை 'ட்ரை' பண்ணி னேன். இப்போ நிறுத்தி விட்டேன்.'' வாசு மாத்திரைப்புட்டியைக் காண்பித்தான்.

இன்னொரு இன்பமான அதிர்ச்சி அவ ருக்கு. ஊர்பூரா கெட்டுப் போனவர்களாகத் துரியோதனனுக்குத் தெரிந்த கதை நினைவுக்கு வந்தது. கெட்ட வழியில் நாட் டம் கொள்ளுவதும் கூட இயல்பாக அந்தந்த வயதில் வரவேண்டும். வயசான காலத்தில் செயற்கையாகப் பழக்கத்தை வருவித்துக் கொண்டால் — இப்படியெல்லாம் வக்கிர மான சிந்தனை தோன்றும் போலிருக்கிறது.

மறுவாரம் வேதகிரி முத்துகிருஷ்ணனை கிளப்புக்கு அழைத்தபோது அவர் பிடிவாத மாக மறுத்துவிட்டார்.

''வேதாளம் முருங்கை மரம் ஏறிவிட் டதே!''

இனிமேல் இறங்கவே இறங்காது என்று சொல்ல வேண்டும் போல் இருந்தது முத்து கிருஷ்ணனுக்கு. சிரித்துக் கொண்டார்.

(பி. எல். படித்து வழக்கறிஞராகப் பணியாற்ற வேண்டிய வெ. ஆ. மூர்த்தி திரைப்படத்துறைக்குத் திரும்பினார். அத்துடன் கை ரேகை பார்க்கும் கலையிலும் இவர் நிபுணர்!)

"நான் திரையுலகில் நுழைந்து பதினேழு ஆண்டுகள் ஆகிவிட்டன. நூற்று எழுபத்திரண்டு படங்களில் நடித்து விட்டேன்."

"அந்தக் காலத்துக்கும் இந்த நாள் காமெடிக்கும் வித்தியாசம் உண்டா?"

"எத்தனையோ இருக்கிறது. நடிப்பில், வசனத்தில், மவுசில் எல்லாவற்றிலும் மாற்றங்கள். ஆனால் ஒன்று மட்டும் 'மாறவே யில்லை!'"

"என்ன அது?"

"விலைவாசி முன்னைவிட விஷம் போல் ஏறியும் நகைச்சுவை நட்சத்திரங்களுக்குத் தயாரிப்பாளர்கள் கொடுக்கும் 'ரேட்' மட்டும் உயராதது பரிதாபமான விஷயம். இதனால் காமெடியன்களின் பட எண்ணிக்கை தான் அதிகமே ஒழிய, பணத்தை எண்ண முடியவில்லை."

"உங்களது வாழ்க்கையில் மன நிறைவை ஏற்படுத்திய நிகழ்ச்சி?"

"ஒரு கலைக் குழுவுடன் தென் ஆப்ரிக்காவுக்குப் போயிருந்தபோது டர்பன் நகர இந்து சொஸைட்டியில் 'இந்து மதமும் சோதிடக் கலையும்' என்பது பற்றி இரண்டு சொற்பொழிவுகள் கொடுத்தேன். அத்துடன் அன்று கூட்டத்துக்கு வந்திருந்த பலரது சந்தேகங்களையும் தீர்த்து வைத்தேன்.

"ஒரு படப் பிடிப்புக்காக நியூயார்க் போயிருந்தேன். அங்கு பிரபல ஜோதிடர் ஜீன் டிக்ஸனைச் சந்திக்க விரும்பினேன். ஜனாதிபதி கென்னடியின் அகால மரணம் பற்றி முன்பே கணித்துச் சொன்ன மாமேதை அவர். மணிக்கு ஐயாயிரம் டாலர் சம்பாதிக்கும் புகழ் பெற்ற ஜோதிடர். ஆறு மாத காலத்துக்கு அவரைப் பார்க்க முடியாத அளவுக்கு 'எங்கேஜ்மெண்ட்' இருந்தது அவருக்கு. ஒரு நியூயார்க் பிரமுகர் அவருடன் நான் டெலிபோனில் பேச ஏற்பாடு செய்தார். எனக்கும் ஜோதிடக் கலையில் நாட்டம் உண்டு என அறிந்து அவர் பேச ஒப்புக்கொண்டார். ஐந்தே நிமிடங்கள்தான் பேசினேன்.

"எனது பிறந்த தேதியைக் கேட்டார். 'இந்த ஆண்டே உங்களுக்கு இன்னொரு வெளி நாட்டுப் பயணம் உண்டு' என்றார். ஜோஸியருக்கு ஜோஸியம் சொன்ன அந்த ஜோஸியரின் ஜோஸியம் பலித்தது!

"அடுத்த சில மாதங்களில் நான் எதிர் பாராமல் திடீரென்று தென் ஆப்பிரிக்கா போகநேர்ந்தது. எனது பாராட்டைக் கடிதம் மூலமாக அவருக்குத் தெரிவித்தேன்."

"நகைச்சுவை நடிப்பில் உங்களைக் கவர்ந்தவர்?"

"சார்லி சாப்ளின். அவரது காமெடி நடிப்பில் ரசிகர்களுக்கு அனுதாபம் பிறக்கு மாதலால் அந்த கேரக்டர் மக்களின் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிடும்.

"ராஜ்கபூர்கூடத் தமது பூட்பாலிஷ், மேரா நாம் ஜோக்கர் படங்களில் சார்லி சாப்ளினைப் போல் சில கேரக்டர்களை அமைத்து வெற்றி கண்டார்.

"இம்மாதிரி நானும் மக்களின் மனத்தில் ஆழப் பதியும்படி சிரிக்க வைத்து அனுதாபத்தைப் பெறும் ஒரு கேரக்டரில் நடிக்க விரும்புகிறேன். அத்தகைய வாய்ப்பை யார் தரப் போகிறார்கள் எனக்கு?"

பேட்டி: மன்னை சௌந்தரராஜன்

# எங்கள் "ரேட்" என்று ஏறும்?



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy. Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani   Layout Artist: Nambi   Editor: K. Rajendran

''கோ-ஆப்டெக்ஸ் ஆடைகள்'' என
பார்த்தாலே தெரிகிறது

சிறப்புத் தள்ளுபடி

# 20%

14.1.83 வரை



கோ-ஆப்டெக்ஸ்

கைத்தறி

REGISTERED No. M 4393
Registered as a Newspaper in Sri Lanka

கரை கடந்தது அம்மா உங்கள் கவனிப்பு. பார்லே

குஞ்சு நெஞ்சம் குதுகுதுக்கக் கொஞ்சும் கிளியாவீர்...

நாடித்
தேர்ந்-
தெடுத்தீர்
பாப்பாவுக்கு
நலமான
பிஸ்கட்.




சுவைமிக்கது பார்லே க்ளுகோ, சாசுரப்-
பானது. உங்கள் பாப்பாவின் ஊட்டத்
தேவைகளுக்கு உரித்தான பிஸ்கட்.
சுகாதாரமிக்கதாய் இதனைப் படைப்போர்:
இந்தியாவிலேயே அதிநவீன பிஸ்கட்
தயாரிப்பாளர்கள்; தரத்திற்கு உலக
விருதுகளை வென்றவர்கள். பாப்பாவுக்கு
உங்கள் பாசத்தை உணர்த்த இதனிலும்
மிஞ்சியது ஏதுமில்லை பாரிலே...
பார்லே க்ளுகோ.



உலகத் தேர்வில்
விருது வென்றது

பார்லே
க்ளுகோ
உங்கள் பாசத்தைப் பேசிடும் குழந்தைப் பராமரிப்பு பிஸ்கட்.

everest/82/PP/418-tm